# சிவாலயங்கள் — இந்தியாவிலும் அப்பாலும்

## முதற்பாகம்



ராவ் பஹதூர்

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.

**இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :**

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பியவிதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்திரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனு, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றும்பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனு, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன்ஜெனரல் விதித்தமருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் ஆறுபாகங்கள், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுரவணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னவளி, கண்டுபிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சிபெறுவதெப்படி ?, ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காக்ஷி, விடுதிப்புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், வள்ளி மணம், கதம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுரம் நாடகச் சபை, சங்கீதப் பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ஜமீன்தார், முதலியன.

முதற் பதிப்பு

சென்னை 'இரத்னவிலாஸ்' அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

காபிரைட்] 1945 [விலை ரூ. 1.

INSCRIBED

TO

THE BELOVED MEMORY

OF

MY PARENTS

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

MY FRIEND

C. RANGAVADIVELU

# முகவுரை

இந்நூலை நான் அச்சிடுவதற்கு மூன்று முக்கியமான காரணங்கள் உள :—

(1) நான் சைவனாகப் பிறந்து சிவ தீட்சை பெற்றுக் கொண்டதற்கு இது நான் பரமசிவத்திற்குச் செய்ய வேண்டிய ஒரு சிறு தொண்டாம்.

(2) பல வருடங்களுக்கு முன், ஒருமுறை நான் திருநெல்வேலியிலிருந்து வண்டிமார்க்கமாய் கன்யாகுமரிக்குப் போய்த் திரும்பினேன். நான் திரும்பி வந்தபிறகு எனது நண்பர்களில் ஒருவர் வழியில் சுசீந்திரம் என்னும் சிவஸ்தலத்தைப் பார்த்தீர்களா என்று கேட்டார். அந்த ஸ்தலம் வழியிலிருப்பது எனக்குத் தெரியாதபடியால், நான் மறுபடியும் சுசீந்திரம் போகவேண்டியதாயிற்று. இப்படிப்பட்ட கஷ்டங்கள் சிவஸ்தல யாத்திரை செய்பவர்களுக்கு இல்லாதபடிச் செய்ய இந்நூல் உபயோகப்படும் என்பதாம்.

(3) சிறு வயதுமுதல் சிவாலயங்களிலுள்ள சிற்பங்களைக் கண்டு நான் மகிழ்வது வழக்கம், அம்மகிழ்ச்சி மற்றவர்களும் அடைவதற்கு இந்நூல் உபயோகப்படும் என நினைக்கிறேன். இன்னின்ன சிவாலயங்களில் இன்னின்ன அழகிய சிற்பங்களிருக்கின்றன, இவை இவைகளைப் பார்க்கவேண்டுமென்று அநேகம் பெயருக்கு தெரியாமலிருக்கிறது; ஓர் அளவில் அக்குறையை தீர்க்க இந்நூலில் முயன்றுளேன்.

இதுவரையில் சிவாலயங்களைப் பற்றி சில புஸ்தகங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன, அவைகள் பெரும்பாலும் 273 தேவாரப் பாடல்பெற்ற ஸ்தலங்களைக் குறிப்பிட்டிருக்கின்றன, சிலவற்றுள் இன்னும் சில சிவாலங்களும் சேர்க்கப்பட்டிருக்கிறன, இந்நூலில் இந்தியா முழுவதிலும், இன்னும் இந்தியாவுக்கு வெளியேயுமுள்ள பலர் அறியாத சிவாலயங்களையும் சேர்த்து சுமார் 4000 சிவாலயங்களைப் பற்றி எழுதியுள்ளேன். பர்மா, கம்பொடியா, ஜாவா, சீனா, காஸ்பியன் கடலருகு, முதலிய இடங்களிலுள்ள சில சிவாலயங்களையும் குறிப்பிட்டிருக்கிறேன்.

இதை வாசிக்கும் சிவ பக்தர்களுக்கு ஒரு வேண்டுகோள். இதில் குறிக்கப்படாத சிவாலயங்கள் இன்னும் இருக்கலாம்; அன்றியும் குறிக்கப்பட்ட சிவாலயங்களைப் பற்றிய பல அரிய விஷயங்கள் விட்டுப்போயிருக்கலாம்,

அன்றியும் சில பிழைகளும் இருக்கலாம், இவைகளை யெல்லாம் சிவ நேயர்கள் எனக்கு தயவுசெய்து எடுத்துக் காட்டுவார்களாயின், அதை அவர்கள் சிவபெருமானுக்குச் செய்யும் பெருந்தொண்டென சிரமேற்கொண்டு இப் புத்தகத்தின் இரண்டாம் பதிப்பில் குறித்தும் திருத்தியும் அச்சிடலாமென்றிருக்கின்றேன்.

குறிப்பு—இந்நூலில் முருகக்கடவுளின் ஆலயங்களைப் பற்றி எழுதாததற்குக் காரணம் அவைகளை யெல்லாம் வேறொரு புத்தகத்தில் அச்சிடத் தீர்மானித்திருப்பதேயாம்.

இந்நூலில் முக்கியமான பல சிவாலயங்களினுடையவும், அவைகளிலுள்ள சிறந்த சிற்பங்களினுடையவும், புகைப்படங்கள் அச்சிட வேண்டியது அவசியம்.

இதை எம்பெருமான் எனக்கு ஆயுளும் தேக ஆரோக்கியமும் இன்னும் கொஞ்சம் கொடுப்பாராயின், பிறகு செய்யலாமென்று உத்தேசித்திருக்கிறேன். இம் முயற்சிக்கு சிவநேயர்களும் சைவ மடாலயத் தலைவர்களும் உதவிபுரியுமாறு வேண்டுகிறேன்.

இந்நூலை இயற்றுவதற்கு உபயோகமாயிருந்த சில நூல்கள் முதலியவை :—

1 தேவாரப் பாடல்பெற்ற ஸ்தலங்களைக் குறிக்கும் சிவக்ஷேத்திர விளக்கம், சிவஸ்தல மஞ்சரி முதலிய புஸ்தகங்கள்.
2 காலஞ்சென்ற K. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் ஆங்கிலத்தில் அச்சிட்ட "இந்தியாவிலுள்ள கோயில்களுக்கு கைட்" (Guide.)
3 மேற்சொன்ன ஆறுமுகம் பிள்ளை அவர்களுடைய வார்சுகள், எனக்குதவிய அவர் அச்சிடச் சேமித்து வைத்திருந்த பல இந்திய கோயில்களின் குறிப்புகள்.
4 பம்பாய், கல்கத்தா முதலிய மாகாணங்களின் ஜில்லா கெஜட்டுகள் (இவை சுமார் 300க்கு மேற்பட்டவை.)
5 யாத்ரீகர்களுக்காக இந்திய ரெயில்வே கம்பெனிகள் வெளியிட்ட பல புஸ்தகங்கள்.
6 ஹிந்து பத்திரிகையில் பல சமயங்களில் இந்திய கோயில்களைப்பற்றி எழுதப்பட்ட குறிப்புகள்.
7 சென்னை அறப்பிரசார சங்கத்தாரின் தூண்டுகோலால் வெளியிடப்பட்ட சில சிவாலயங்களைப் பற்றியநூல்கள்.
8 சர் பெர்கூசன் எனும் ஆங்கிலர் அச்சிட்டுள்ள இந்திய சில்ப சரித்திரம் முதலிய நூல்கள்.

ப. சம்பந்தம்.

# சிவாலயங்கள்

**அக்கசாலை**—ஸ்ரீவைகுண்டம் தாலூகா திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி—சிவாலயம். ஸ்வாமி பெயர் கல்வெட்டுகளில் அக்கசாலை ஈஸ்வரமுடையார், என்றிருக்கிறது—திராவிடசில்பம்.

**அக்கிரஹாரபச்சஹல்லி**—கிருஷ்ணராஜ்பெட் தாலூகா, மைசூர் ராஜ்யம்—சிவாலயம். ஸ்வாமி ஹுணேஸ்வரர்.

**அகங்கரை**—சென்னை ராஜதானி திருச்சிராப்பள்ளி ஜில்லா, மாத்துறைக்கு ஒரு மைல்; சிவாலயம். ஸ்வாமி மருதாந்தநாதர்; தேவி சுந்திரகாஞ்சனை. மருதாந்தர் பூசித்த ஸ்தலம்.

**அகத்தியான்பள்ளி**—தென் இந்தியா—வேதாரண்யத்திற்கு ஒரு மையில் தெற்கிலுள்ளது. சிவாலயம். அகஸ்தீஸ்வரர் பூசித்தபடியால் அப்பெயர் பெற்றது. அகஸ்தியர் உற்சவ விக்ரகம் இக்கோயிலிலிருக்கிறது. ஸ்வாமி அகஸ்தீஸ்வரர்; தேவி பாகம்பிரியாநாயகி, மங்கை நாயகி-அக்னி தீர்த்தம். திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது. இங்கு பல கல்வெட்டுகள் உள.

**அகத்தீச்சுரம்**—திருவாங்கூர் ராஜ்யத்தில் கன்யாகுமரிக்கு 3 மையில் அருகிலுள்ளது. சிவாலயம். ஸ்வாமி அகஸ்தீஸ்வரர்; தேவி அமிர்தவல்லி; சமுத்திர தீர்த்தம்; அகஸ்தியரும் லோபாமுத்திரையும் பூசித்தது. வைப்புஸ்தலம்.

**அகரம்சேத்தூர்**—தென் இந்தியா; சிவாலயம்.

**அகஸ்தீஸ்வரகோண்டா**—தென் இந்தியா-வடஆற்காடு ஜில்லா; சிவாலயம்.

**அகாக்ஷி**—பம்பாய் ராஜதானி-தாணா ஜில்லா பேசின் பிரிவு. வீரார் (பீரார்) ஸ்டேஷனுக்கு 3 மையில் மேற்கு. பவானிஷங்கர் கோயில், 1691 ஷு கட்டப்பட்டது. கோயிலுக்கு அருகிலுள்ள தீர்த்தம் விசேஷமானது. இங்கு தர்மசாலையுண்டு.

அகோலா பிரிவு—பார்சிதக்லி-மத்யமாகாணம். இங்குள்ள சிவாலயங்கள் (1) அகோலா-மஹாதேவ் கோயில் ஹேமாத் பண்ட்கட்டிடம். (2) தார்கோட்-மஹாதேவர் கோயில். (3) போர்கோவான் மஹாதேவர் கோயில். (4) காரன்ஜா சித்தேஷ்வர்கோயில், கோலேஷ்வர் கோயில். (5) குடாசா கோடேஷ்வர் கோயில்; ஹேமாத்பண்ட் கட்டிடம். (6) சிந்த்கேட்—மோரேஷ்வர் கோயில்; ஹெமாத்பண்ட் கட்டிடம். (7) மூர்தூஜாபூர்—திரியம்பகேஷ்வர் கோயில், புதியது. (8) வையாலா, சிவாலயம்; ஹெமாத்பண்ட் கட்டிடம்.

அங்காடிபுரம்—மலபார் ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம். இங்குள்ள சிவலிங்கம் பார்வதிதேவியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பது ஐதிகம்.

அங்குடி—கோடுர் ஜில்லா, மைசூர் ராஜ்யம், மூதுகிரெக்கு 7 மையில் தெற்கு, இங்கு இரண்டு சிவாலயங்கள் உண்டு-பாதாள ருத்திரர் கோயில், மல்லெஸ்வரர் கோயில்.

அங்கோர்தோம்—இது ஆசியாகண்டத்தில் கம்போடியா தேசத்திலுள்ளது. சிவாலயம் தற்காலம் பாழடைந்திருக்கிறது. பூசைகிடையாது. கர்ப்பக் கிரஹத்தைச்சுற்றி கீழ்மட்டத்தில் பல சிறு கோயில்கள் உண்டு; ஒவ்வொரு கோயிலுக்கும் விமானத்திற்கு பதிலாக 5 அடி முதல் 7 அடி வரையிலும் உயரமுள்ள முகங்கள் இருக்கின்றன; இக்கோயிலில் இம்மாதிரியான முகங்கள் 160 ஆதியில் இருந்தன; இவைகள் ஆதியில் பௌத்தமத அவலோகிதேஸ்வரரைக் குறித்தன; இக்கோயில் பிற்காலம் சிவாலயமாக்கப்பட்டதென்பர். இக்கோயிலின் வாயிலில் 100 அடி நிகளம் நாகர்கள் நிர்மிக்கப்பட்டிருக்கின்றனர். இந் நாகர்களில் ராட்சதர்களைப் போன்ற உருவங்களும் தேவர்களைப் போன்ற உருவங்களும் இருக்கின்றன. (திருப்பாற்கடலைக் கடைந்த ஐதிகமாயிருக்கலாகுமா?) இக்கோயிலுக்கு பாயோன் அல்லது பாகோன் என்று பெயர்; கோயில் மணற்கல்லாலாக்கப்பட்டது. இக்கோயில் சுமார் 700 ஆம் ஆண்டில் கட்டப்பட்டதாக எண்ணப்படுகிறது.

**அங்கோர்வாட்**—கம்போடியா தேசம் ஆசியா கண்டம். இங்குள்ள விஷ்ணு ஆலயத்தில் ஒரு இடத்தில் சிவலிங்கமும் நந்தியும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. இதற்கருகில் **ஈஸ்வரபுரம்** எனும் ஓர் சிவாலயமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதிலுள்ள ராவணன் கைலாயத்தைத் தூக்க யத்னித்த சில்பம் அழகியதென்பர்.

**அச்சிறுபாக்கம்**—சென்னை ராஜதானி மதுராந்தகம் தாலூகா, செங்கல்பட்டு ஜில்லா, சிவாலயம். அச்சரப்பாக்கம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு அரைமையில் தூரம். ரெயில் ஸ்டேஷன்; ஸ்வாமி பார்க்கபுரீஸ்வரர், தேவி சுந்தரநாயகி; அதிசுந்தர மின்னம்மை, பாலகுசாம்பாள்; தேவதீர்த்தம், சங்குதீர்த்தம், கோயிலுக்குள் சிங்க தீர்த்தம்; கொன்றை விருட்சம். சிவபெருமான் திரிபுரதகனஞ் செய்யத் தேர் ஊர்ந்தபோது அச்சுமுறிந்த ஸ்தலம்; எனவே அப்பெயர்வந்தது. இங்கிருக்கும் அட்சேஸ்வரர் கோயிலின் மண்டபத்தில் வடக்கு சுவரில் முதல் குலோத்துங்க சோழன் உருவம் உளது. இக்கோயில் அவனால் கட்டப்பட்டதாம். ஆகவே கோயில் சுமார் 1074 ஆம் ஆண்டில் கட்டப்பட்டதாக மதிக்கப்படுகிறது. இங்குள்ளகல்வெட்டுகளில் ஸ்வாமி பெயர் "ஆட்சிகொண்ட நாயினர்" "ஆட்சீஸ்வரர்" என்றிருக்கிறது. கோபுரம் ஏழு நிலைகளையுடையது, ஆயினும் மேலே 5 கலசங்கள் தானிருக்கின்றன. இங்கு முசாபர் பங்களா உண்டு. கோயில் சுமார் 265 அடி நிகளம் 140 அடி அகலம். பாக்கபுரி, பாக்கபுரம் என்றும் வேறு பெயர்கள் உண்டு. மூலஸ்தானத்தில் 2 அவுடையார்கள் உள; எமையாட்சீசர், உமையாட்சீசர், என்று பெயர். உமையாட்சிசர் கோபுரத்திற்கு நேராக இருக்கிறார், சுயம்புமூர்த்தி. இவ்வூருக்கு அருகிலுள்ள மலையுச்சியில் ஒரு சிவாலய முண்டு. வருடந்தோறும் ஆட்சீஸ்வரர் இங்குவந்து சம்பந்தருக்கும், அகஸ்தியருக்கும் காட்சி கொடுக்கிறார். இம்மலையின் தென்கோடிக்கு பெரும்பேர் எனப் பெயராம். இங்கு **தான்தோணீஸ்வரர்** கோயில் **கைலாசநாதர்** கோயில், என்று இரண்டு சிவாலயங்களுள. தான்றோணீஸ்வரர் கோயிலில் பழய கல்வெட்டுகள் உண்டு. பிரம்மோற்சவம் சித்திரைமாசம், ஐந்தாநாள் திருக்கல்யாணம், ரிஷபவாகனம். 7 நாள் கொன்றையடியில் திரிநேத்ரதாரிகாட்சி

விஷேசம்; பதினோராம் நாள் பெரும்பேருக் கெழுந்தருளி அகஸ்தியருக்குக் காட்சி; வைகாசி மாசம் சம்பந்தர் உற்சவம். பாண்டிய அரசன் சிவாலய கைங்கரியத்திற்காகக் கொண்டுவந்த மணல் வண்டிகளின் அச்சு இங்கு முறிந்ததாக ஒரு ஐதிகம் உண்டு. இந்த இடத்திற்கு வண்டிகுப்பம் என்று பெயர். கண்வர், கௌதமர், பூசித்தஸ்தலம். கோயிலில் சுமார் 30 கல்வெட்டுகள்உள. வீரராஜேந்திரன் முதலிய சோழ அரசர்கள் கல்வெட்டுகள்; சுமார் 11, 12 ஆம் நூற்றாண்டுகளிலிருந்து உள, திராவிட சில்பம். கோயிலில் அந்தராளத்தில் ஆவுடையாருக்கு முன்னால் 8 அடி ஆழமுள்ள கிணற்றுக்குள் ஒரு சுரங்கமுள்ளது. கல்லால் மூடப்பட்டிருக்கிறது. திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது.

**அசல்**—பாடான்தாசில், குருதாஸ்பூர் ஜில்லா, பஞ்சாப் மாகாணம். வடமேற்கு ரெயில்வே ஸ்டேஷன்; பாடான் ஸ்டேஷனிலிருந்து 3 மையில்; சிவாலயம், அழகியது. இங்கு தர்மசாலையுண்டு.

**அசல்புரம்**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி, சீர்காழிக்கு 10 மையில். சிவாலயம்; ஸ்வாமி சிவயோகத்தியாகராயர்; திருஞான சம்பந்தர் கலியாணம் நடந்த இடம். திராவிடசில்பம்.

**அசோதர்**—பட்டேபூர் பிரிவு, ஐக்கிய மாகாணம். இங்கு ஒரு சிவாலயமிருந்து அழிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இவ்வூருக்குப் பழயபெயர் அஸ்வத்தாமபுரமாம்.

**அஞ்சைக்களம்**—(திரு) குடமலைநாட்டில் தென்மேற்கு இந்தியாவிலுள்ளது; பழய பெயர் கொடுங்கோளூர். இருஞாலக்கடை எனும் ரெயில் ஸ்டேஷனுக்கு 4 மையில். இது திருவஞ்சிக்குளம், திருவாஞ்சிக்குளம், என்றும் சாதாரணமாக அழைக்கப்படுகிறது. தன் தாயாரைக் கொன்ற பழிதீர பரசுராமர் பூசித்த க்ஷேத்திரம். சுந்தரர் வெள்ளை யானையின்மீதும் சேரமான்பெருமாணயனார் குதிரைமீதும் ஏறி, இங்கிருந்து கைலாயம் சென்ற ஸ்தலம். ஸ்வாமி அஞ்சைக்களத்தீஸ்வரர்; தேவி உமையம்மை; ஸ்வாமிக்கு வஞ்சுளேஸ்வரர் என்றும் திருநாமமுண்டு. சிவகங்கை தீர்த்தம், ஆலவாய் தீர்த்தம். கோயில்பிராகாரத்

தில் 18 லிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. இக்கோயில் மலையாள தேசத்திலிருந்தும், தெற்கு திராவிட கோயில்களைப் போன்றது. கொச்சியில் ஆண்டபெரு மாள்களில் ஒருவரால் கட்டப்பட்டதாம். கோயிலில் சில மிகவும் பழய வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள. இங்குள்ள பிரசித்திப்பெற்ற **பகவதி கோயிலின்** மத்தியில் ஒரு சிவாலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

**அட்டஹாசா**—வட இந்தியா சிவாலயம். ஆரியசில்ப மமைந்தது. ஸ்வாமி—மஹாநாதர், சுயம்புலிங்கம்.

**அடைப்பளம்**—சென்னை ராஜதானி. சிவாலயம் ஸ்வாமி காலகண்டேஸ்வரர்.

**அண்டமி**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி—பட்டுக்கோட்டை தாலூகா. சிவாலயம். பிரம்மோற்சவம் சித்திரை மாசம்; புரட்டாசி மாசம் ருத்திரபதியார் அன்ன உற்சவம் விசேஷம். திராவிட சில்பம்.

**அண்ணமலை**—(திரு) தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன் சென்னை ராஜதானி. ஸ்வாமி—அருணசலேஸ்வரர்—தேவி உண்ணமுலையம்மை, முக்கிய தீர்த்தங்கள்—சிவகங்கை, பிரமதீர்த்தம், திக்பாலர்கள் தீர்த்தம். பஞ்சலிங்கங்களில் இங்கு தேஜோலிங்கம். இதை தட்சிண கைலாயம் என்று கூறுவர். நினைக்க முத்தியளிக்கும் க்ஷேத்திரம். சிவபெருமான் வல்லாளராஜனுக்குப் புத்திரனுகத் தோன்றிய ஸ்தலம்; பார்வதி தேவியார் பரமசிவத்தின் கண்களை மூடிய பாவம்தீர தவஞ்செய்து சிவபெருமானுடைய இடப்பாகம் பெற்ற இடம். பிரம்மா விஷ்ணுக்களின் விவாதம் தீரும்பொருட்டு பரமசிவம் அவர்களுக்கிடையில் ஜோதி லிங்கமாகத் தோன்றிய ஸ்தலம். அருணகிரிநாதர் பிறந்த ஊர். அவருடைய சிலையொன்று கோயிலிலிருக்கிறது. பிரதட்சிணம் செய்த புனுகுபூனை, குதிரை முதலியன நற்பதவி பெற்ற க்ஷேத்திரம். பெரிய கோயில் பெரிய கோபுரம் 11 நிலைகளுள்ளது. 1516 ஆம் ஆண்டில் கிருஷ்ணதேவராயரால் ஆரம்பிக்கப்பட்டு பிறகு சேவப்ப நாயக்கர் காலத்தில் (1549—1582) முடிக்கப்பட்டது. இவர்காலத்தில் இங்குள்ள பெரிய குளம் வெட்டப்பட்டது. ஆயிரக்கால் மண்டபமும் நூற்றுக்கால் மண்டபமும் குள

மும், கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்டனவென்று இங்குள்ள கல்வெட்டொன்று குறிக்கிறது. மற்றொரு கோபுரம் சுமார் 1537 ஷு ராஜநாராயண சுயம்புராயரால் கட்டப்பட்டது. 1012 ஆம் ஆண்டில் ஆண்ட ராஜேந்திர சோழன் காலத்திய கல்வெட்டொன்று இங்குளது. இங்கு பஞ்சமுகங்களுடைய மஹாதேவர்சிலை பார்க்கத்தக்கது. பிரம்மோற்சவம் கார்த்திகை மாசம். இங்குள்ள வாஹனங்கள் எல்லாம் மிகப்பெரியவை. கார்த்திகை தீபம் மிகவும் விசேஷம். இங்குள்ள மலைக்கு சோணாசலம் என்று பெயர். சுமார் 3000 அடி உயரமுள்ளது. இது கிருத யுகத்தில் அக்னிமலையாயும், திரேதா யுகத்தில் சுவர்ண மலையாயும், துவாபர யுகத்தில் தாம்பிரமலையாயும், கலியுகத்தில் கல்மலையாயும் ஆயதென்பர். திருஞான சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது. கோயிலில் ஒரு கோபுரம் வல்லாள ராஜன் கோபுரம் என வழங்கப்படுகிறது. ஆடி மாசம் சுந்திரமூர்த்தி ஸ்வாமிகள் மணத்தில் தடுத்தாட்கொண்ட ஐதிகம் இங்குள்ள குருக்கள்மார்களால் மிகவும் சிறப்பாக நடத்தப்படுகிறது. இங்கு சுமார் 40 சத்திரங்களுக்குமேல் உண்டு; முசாபர் பங்களாவும் உண்டு. கோயில் அழகிய திராவிட சில்பம்.

**அணி அண்ணாமலை**—திருவண்ணாமலைப் பிரதட்சிண வழியிலுள்ள சிவஸ்தலம், நாலாவது மைலிலுள்ளது. வைப்புஸ்தலம். ஸ்வாமி அருணாசலேஸ்வரர், தேவி உண்ணாமுலையம்பாள்; பல தீர்த்தங்களுண்டு.

**அதிகை**—(திரு) சென்னைராஜதானி தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன்; பண்ணுருட்டிக்கு இரண்டு மயில் கிழக்கிலுள்ளது. ஸ்வாமி—வீரட்டானேஸ்வரர்; தேவி திரிபுர சுந்தரி; ஸ்தல விருட்சம் கொன்றை; தீர்த்தம்-கெடில நதி சூலகங்கை, சக்கர தீர்த்தம். சிவபெருமான் திரிபுரதகனம் செய்த ஸ்தலம்; திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஜைனமதத்தை விட்டு சைவசமதத்தைச் சேர்ந்த ஸ்தலம். சுந்தரருக்கு திருவடிசூட்டிய ஸ்தலம்; பல்லவ அரசன் காடவர்கோன் எனும் சமணராஜன் திருநாவுக்கரசு ஸ்வாமிகளால் சைவனாக்கப்பட்டபின், பாடலீபுரத்திலிருந்த சமணப்பாழிகளையெல்லாம் அழித்து, அக்கற்களைக்கொண்டு, குணதரவீச்

சுரம் எனும் இங்குள்ள ஆலயத்தைக்கட்டினன். இவ்வரசனுக்கு மஹேந்திரவர்மன் எனப் பெயர் பிறகுவந்தது. (600—630) கர்ப்பக்கிரஹம் விசித்திரமானது; பழய பல்லவ கட்டிடம்; பார்க்கத்தக்கது. மூவர் பாடல்பெற்ற க்ஷேத்திரம். விஷ்ணு, பிரம்மா, கருடன், பாண்டவர்கள், பூசித்த ஸ்தலம். இதற்கு சிறிது மேற்கே திருவாமூர் என்று ஒரு சிவக்ஷேத்திரமுளது. அப்பர் பிறந்த க்ஷேத்திரம்; ஸ்வாமி பசுபதீஸ்வரர், தேவி திரிபுரசுந்தரி.

**அதிராளா**—செய்யாற்றங்கரையிலுள்ளது; சென்னை ராஜதானி; கடப்பை ஜில்லா. சிவாலயம். இங்குள்ள குளத்தில் பரசுராமர் மூழ்கி மாத்ருஹத்தி நீங்கியதாக ஐதிகம். சிவராத்திரி உற்சவம் விசேஷம். இங்கு சத்திரங்களுண்டு.

**அந்தியூர்**—சென்னை ராஜதானி, கொங்குநாட்டிலுள்ளது. சிவாலயம் கெட்டி முதலியார்களால் கட்டப்பட்டது. இங்குள்ள விநயகருக்கு கெட்டி விநயகர் என்று பெயர்.

**அநந்தநல்லூர்**—சென்னை ராஜதானி, திருச்சிராப்பள்ளி ஜில்லா. சிவாலயம், ஸ்வாமி பரமசிவம், தேவி பாலாம்பாள்.

**அநந்தபுரம்**—திருவாங்கூர் ராஜ்யம், பத்மநாப ஸ்வாமி ஆலயத்தில் ஸ்வாமியின் கையின்கீழ் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இங்குள்ள மற்றொரு சிவாலயம், **நீலகண்டர் கோயில்**, ஸ்வாமி நீலகண்டர், உமா தேவி, அநந்த தீர்த்தம்.

**அநந்தபூர்**—அநந்தபூர் ஜில்லா, சென்னை ராஜதானி; தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன். இங்கு ஒரு சிவாலயமுள்ளது.

**அநவட்டி**—தென் இந்தியா மைசூர்ராஜ்யம், அலரி ரெயில் ஸ்டேஷனுக்கு 20 மையில். சிவாலயம்—ஸ்வாமி கைடபேஸ்வரர், தேவி பார்வதி. கோயில் ஜக்கனசாரியாரால் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. சளுக்கிய சில்பம்; பெரிய மண்டபம் மிகவும் அழகியது. சிவலிங்கம் மிகப் பெரியது. சத்திரங்களுண்டு. கோயில் ஊருக்கு அரை மையில் வடக்கு.

**அநேகதங்காவதம்**—(திரு) அநேக தங்காபதம் என்றும் அழைக்கப்படுகிறது. இந்தியாவின் வடக்கேயுள்ளது.

கௌரி தவஞ்செய்தமையால் இதற்கு கௌரிகுண்டம் என்றும் பெயர். ஹரித்துவாரத்திற்கு அருகிலுள்ளது. சூரியனும் சந்திரனும் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி அநேகதங்காவதநாதர் அல்லது அருண்மன்றநாயகர், அருண்மன்னுஈஸ்வரர்; தேவி மனேன்மணியம்மை; ஞான தீர்த்தம், இந்திர தீர்த்தம்; திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது.

அப்பிகட்லா—குண்டூர் ஜில்லா, சென்னை ராஜதானி—பாபட்லா தாலூகா சிவாலயம். ஸ்வாமி விஸ்வேஸ்வரர்.

அப்பெகொண்டா—சென்னை ராஜதானி விசாகபட்டணம் ஜில்லா கடற்கரையோரம். இங்கு பல சத்திரங்கள் உண்டு.

அம்பர்—இதற்கு அம்பர் பெருந்திருக்கோயில் என்று பெயர். தென் இந்தியா பூந்தோட்டம் ஸ்டேஷனுக்கு இரண்டு மையில் கிழக்கு; கோச்செங்கண் சோழனல் கட்டப்பட்டது - மாடக் கோயில் - ஸ்வாமி பிரமபுரீஸ்வரர், தேவி பூங்குழல் நாயகி; பிரமதீர்த்தம் அன்னமாம் பொய்கை; புன்னை விருட்சம். சிலந்தியாகவிருந்து சிவபெருமானருளால் மறு பிறப்பில் அரசனகப் பிறந்த கோச்செங்கட் சோழனுக்கு, பரமசிவம் மணக் கோலம் கடாட்சித்த ஸ்தலம்; பிரமன் பூசித்த ஸ்தலம்; சோமாசி மாற நாயனர் முத்தி பெற்ற ஸ்தலம்.

அம்பலப்புழை—தென் இந்தியா மலையாள தேசம். சிவாலயம்; ஸ்வாமி சிதம்பரேசர், உமாதேவி, கோயிலில் பாயச நைவேத்யம் விசேஷம்.

அம்பர்—வட இந்தியா, ஜெயபுரிக்கு அருகிலுள்ளது-ராஜபுதனத்தில். சிவாலயம்.

அம்பர்நாத்—பம்பாய் ராஜதானி-கலியாண் ஜில்லா, ஜி. ஐ. பி ரெயில் ஸ்டேஷனுக்கு கிழக்கில் ஒரு மையில் தூரத்தில் சிவாலயமுளது. ஸ்வாமி-அம்பர்நாத், தேவி-பார்வதி. இதில் 1060 கி. பி. கல்வெட்டொன்று இருப்பதால் கோயில் பதினேராம் நூற்ருண்டிற்கு முற்பட்டதா யிருக்க வேண்டும். கோயிலுக்கு 3 முக்கிய வாசல்கள் இருக்கின்றன. கர்ப்பக்கிரஹம் மிலேச்சர்கள் காலத்தில் கொள்ளை

யடிக்கப்பட்டது. லிங்கம் பூமியில் கொஞ்சம் புதைந்திருக் கிறது. கர்ப்பக்கிரஹத்திற்கு வெளியில் பல அழகிய சில்ப பங்கள் உள; அவற்றுள் பார்வதியோடு கூடிய மஹா தேவர் சிலை பார்க்கத்தக்கது. விமானத்திற்குத் தெற்குப் புறம் காளி யிருக்கிறது. சளுக்கிய சில்பம்.

**அம்பர் மாகாளம்**—தென் இந்தியா, சென்னை ராஜ தானி-பேரளம் ஸ்டேஷனிலிருந்து 3½ மையில். அம்பா சூரனைக் கொன்ற பழிதீர காளி சிவபெருமானைப் பூசித்த க்ஷேத்திரம். இதற்கு கோயில்திருமாகாளம் என்றும் கோயில்திருமூலம் என்றும் பெயர் உண்டு. மஹாகாள ரிஷி பூசித்த ஸ்தலமாதலால் அம்பர்மாகாளம் எனப் பெயர் வந்ததென்பர். ஸ்வாமி-காளகண்டேஸ்வார்-தேவி பயக்ஷயநாயகி; தேவ தீர்த்தம் அல்லது மாகாள தீர்த்தம். காளி கோயில் வெளிப் பிராகாரத்தி லிருக்கிறது. பிரம் மோற்சவம் வைகாசி மாதம். சோமாசிமாற நாயனர் யாக உற்சவமும் நிர்மாலிய உற்சவமும் விசேஷம். இக் கோயி லினுள்ள லிங்கோத்பவ மூர்த்தி பதினோராம் நூற்றாண்டியது என்பர். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. கோயிலில் சோமாசிமாற நாயனர் யாகஞ் செய்த இடத்தில் தியாகேச ரும் அம்மனும் நீசத் திருமேனியுடன் விளங்குகின்றனர்.

**அம்பாலி**—குட்லி தாலுகா, பல்லாரி ஜில்லா, சென்னை ராஜதானி. கள்ளேஸ்வரர் கோயில். சளுக்கிய சில்பம்; கோயில் கருப்புக் கல்லால் கட்டப்பட்டது. 1081 ஆம் ஆண்டிய கல்வெட்டுளது; ஆகவே அதற்கு முன்பு கட்டப் பட்டிருக்க வேண்டும்:

**அம்பாசமுத்திரம்**—மேற்படி தாலுகா, திருநெல்வேலி ஜில்லா; சென்னை ராஜதானி, தென் இந்தியா ரெயில் ஸ்டே ஷன்; இங்கு 4 சிவாலயங்கள் உள (1) **கைலாசநாதர்** கோயில்; தாம்ரபர்ணிக் கரையிலுள்ளது. கோபுரம் அடி நிலையுடன் நிறுத்தப்பட்டது; விஜயநகர அரசர்கள் காலத்திய தாயிருக்கலாம் (2) **திருமூலநாதர் கோயில்**; புதியது (3) **அகஸ்தியர் கோயில்** புதியது. (4) **எரிச்ச உடையார் கோயில்**; பழய கோயில், ஒன்பதாவது நூற்றாண்டிய இரண்டு வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள; மாறன் சடையன் காலத்தியவை. 985-1013 ஆண்ட ராஜராஜ சோழனுடைய

கல்வெட்டும் உளது. ஸ்வாமி எரிச்சமுடையார், தேவி சிவ காமி, தாம்ரபர்ணி தீர்த்தம். அகஸ்தியர் பூசித்த க்ஷேத்தி ரம். இங்கு முசாபர் பங்களாக்கள் உண்டு.

**அம்பிகை**—வட இந்தியா, சிவாலயம், ஸ்வாமி உமாபதி; சுயம்பு லிங்கம் ; ஆரிய சில்பம்.

**அம்பு கோயில்**—சென்னை ராஜதானி, புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ளது. ஆலங்கு தாலுகா, புதுக்கோட் டைக்கு 29 மைமில். கல்வெட்டுகளில் ஊர் பெயர் அழிம் பில் என்றிருக்கிறது. சிவாலயம் பழய சோழக் கட்டிடம். ஸ்வாமி பெயர் கல்வெட்டுகளில் வீர ராஜேஸ்வரி சோழீஸ்வர முடைய நாயனர் என்றிருக்கிறது.

**அம்மன் குறிச்சி**—சென்னை ராஜதானி புதுக்கோட்டை சமஸ்தானம், திருமெய்யம் தாலூகா, சிவாலயம் அழகியது. ஸ்வாமி சுந்தரேஸ்வரர். இங்குள்ள அணிவெட்டு மண்டபத் தின் சில்பங்கள் பார்க்கத்தக்கவை. புதிய கோயில். ஆவணி மூல உற்சவம் விசேஷம்.

**அம்மன் பேட்டை**—தஞ்சாவூரிலிருந்து திருவையாறுக் கும் போகும் வழியிலுள்ள சிவாலயம், சென்னை ராஜதானி. மஹா விஷ்ணு மோஹினி அவதாரத்தில் பஸ்மாசூரனைக் கொன்ற பழி தீரும் பொருட்டு சிவலிங்கத்தைப் பூசித்த ஸ்தலம்; இங்குள்ள ஜகன் மோஹினி யாகிய விஷ்ணுவின் சிலை அழகியது.

**அம்ரோடி** பிரிவு. மத்திய மாகாணம். இங்கு அடியிற் கண்ட சிவாலயங்கள் உள. (1) **அம்நேர்** சிவாலயம், ஸ்வாமி மஹாதேவ். இங்கு அருகாமையிலுள்ள ஆற்றின் கீழ் மூழ் கிப்போன ஒரு சிவாலயம் இருப்பதாக வதந்தி. (2) **பைரட்** இங்கு குன்றின் பேரில் வைர தேஷ்வர் சிவாலயம், பழமை யானது. (3) **தாமந்திரி** சிவாலயம், ஸ்வாமி மகாதேவர் கோயில் ஹேமாத் பண்ட கட்டிடம். (4) **கௌண்டின்யூர்** புதிய சிவாலயம் சுமார் 130 வருடங்களுக்கு முன்பு கட்டப் பட்டது. (5) **கோண்டேஷ்வர்** சிவாலயம். ஹேமாத் பண்ட கட்டிடம், கல்லாலாயது. (6) **மோக்ரி** அல்லது மஞசிரா சிவாலயம். குகைக் கோயில் 16 அடி சதுரம் 8 அடி உய ரம். (7) **சல்பார்டி** ; இங்கும் ஒரு சிவாலயமுண்டு ; குகைக் கோயில்.

**அம்முண்டி**—குடியாத்தம் தாலுகா, வட ஆற்காடு ஜில்லா சென்னை ராஜதானி, ஐம்பூண்டி என்பதின் திரிபு, கல்வெட்டுகளில் ஐம்பூண்டி என்றே இருக்கிறது. திரிதா ளீஸ்வரர் கோயில். கல்வெட்டுகளில் மூப்பனை யீஸ்வர முடையார் என்று ஸ்வாமி பெயர் இருக்கிறது.

**அமரகுந்தி**—சென்னை ராஜதானி கொங்கு நாட்டி லுள்ளது. சிவாலயம் கட்டி முதலியார்களால் கட்டப் பட்டது.

**அமராவதி**—சேலம் ஜில்லா சென்னை ராஜதானி, அம ரேஸ்வரர்; கோயில் சுமார் 1000 வருடங்களுக்கு முன் கட் டப்பட்டதென்பர்.

**அமராவதி**—சட்டனபள்ளி தாலுகா, குண்டூர் ஜில்லா சென்னை ராஜதானி, கிருஷ்ணா நதிக்கரையிலுள்ளது. பழய சிவாலயம் தட்சலிங்கம்; ஸ்வாமி மல்லேஸ்வரர்; கல் வெட்டுகளில் மல்லீஸ்வரமுடைய மஹா தேவர் என்றிருக் கிறது.

**அமரேஷ்வர்**—ராஜபுதனம், வட இந்தியா, மாள்வா ரெயில், மோர்டக்கா ஸ்டேஷனிலிருந்து 7 மைல், நரு மதை நதியின் கரையிலுள்ளது சிவாலயம். ஸ்வாமி-ஓங் கார்ஜி மிகவும் புராதனமான கோயில். கார்த்திகை பௌர் ணமியில் இங்கு ஒரு பெரிய சந்தை நடக்கிறது. தர்மசாலை யுண்டு. பண்டாக்கள் வீடுகளுமிருக்கின்றன.

**அமார்நாத்**—வட இந்தியா காஷ்மீர, தேசத்திலுள்ளது. ராவல்பிண்டி ஸ்டேஷனிலிருந்து 39 மயில்; மறிக்குப் போய், அங்கிருந்து 158½ மயில் ஸ்ரீநகருக்குப் போய், அங் கிருந்து 80 மையில் கால் நடையாய்ப் போகவேணும். சிவா லயம் குகையிலிருக்கிறது. சிவலிங்கம் பனிக்கட்டியாலா யது, ஸ்வாமி அமரேஷ்வர் அல்லது அமரேஸ்வரர், தேவி பார்வதி; பார்வதிக்கு இங்கு சிவபெருமான் உபதேசம் செய்ததாக ஐதிகம். குகையின் மேலிருந்து துளிக்கும் நீர்த்திவலைகள் அமிர்தமாக மதிக்கப்படுகின்றன. இக் குகைகருள் இருக்கும் புருக்கள் ருத்திர கணங்களாக எண் ணப்படுகின்றன. குகை வாயில் சுமார் 80 அடி; உள் அளவு 100 அடி சதுரம். இச் கோயில மே ஜூன் மாசங் கள் மாத்திரம் திறந்திருக்கும்.

**அமிர்தசரஸ்**—வட இந்தியா ரெயில் ஸ்டேஷன். சிவாலயம்; ஸ்வாமிக்கு பொதுவாக மஹா தேவர் என்று பெயர். ஸ்டேஷனுக் கருகில் தர்மசாலையுண்டு.

**அமிர்தபுரம்**—கோடூர் ஜில்லா, மைசூர் ராஜ்யம்; தரிகெ ரெயிலிருந்து 6 மைல். 1197 ௵ ஹொய்சல அரசனாகிய வீரபல்லாளன் காலத்தில் கட்டப்பட்டதென்பர். அமிர்தேஸ்வரர் கோயில் இடிந்திருக்கிறது. இங்குள்ள முக மண்டபத்திலும் நவரங்க சபையிலும் அழகிய சில்பங்கள் இருக்கின்றன. பாகவத் புராணம், மஹா பாரதம், இராமாயணக் கதைகள் கல்லில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. சளுக்கிய சில்பம். கோபுரத்தின் எதிரில் ஹொய்சலர்களுடைய பிருது இருக்கிறது. இதன் பக்கலில் உள்ள கஜ சம்ஹாரமூர்த்தி பார்க்கத்தக்கது. சிவராத்ரி காலையில் சூரிய நமஸ்காரம்.

**அய்ஹோல்**—அய்கோள் எனவும் அழைக்கப்படுகிறது ; பீஜபூர் ஜில்லா பம்பாய் ராஜதானி; **கோடைகுடி** சிவாலயம். இங்கு சில அழகிய சிலை உருவங்கள் இருக்கின்றன. கோயில் சிறிது பாழுடைந்திருக்கிறது. இங்குள்ள மற்ற சிவாலயங்கள் :— **லாட்கான் கோயில்**—ஆதியில் விஷ்ணு ஆலயமாயிருந்து பிறகு சிவாலயமாக மாற்றப்பட்டதென்று மிஸ்டர் கசினஸ் எண்ணுகிறார். கோயில் 4-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. லாட்கான் எனும் மஹமதியன் இங்கு வசித்தப்படியால் லாட்கான் கோயிலெனப் பெயர் பெற்றது. **விரூபாட்சர்கோயில்**; இது ஆதியில் ஜைன ஆலயமாயிருந்து ஒரு சிவாலயமாக மாற்றப்பட்டதாம்.

**அரிமலம்**—அரிமழம் என்றும் அழைக்கப்படுகிறது. திருமெய்யம் தாலூகா, புதுக்கோட்டை சமஸ்தானம், சென்னை ராஜதானி; சிவாலயம். ஸ்வாமி சுந்தரேசர், தேவி-மீனாட்சியம்மன். இங்கு **மற்றொரு சிவாலயமு**முண்டு.

**அயனாவரம்**—செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜதானி; சென்னைக்கு அருகிலுள்ளது. சிவாலயம் ஸ்வாமி **பிரமேஸ்வரர்** தேவி-பார்வதி; மற்றொரு கோயில், **காசிவிஸ்வநாதர் கோயில்**-விஸ்வநாதர்-விசாலாட்சி.

**அயோத்யை**—வட இந்தியா அயோத்யை-ரோஹில் கண்ட ரெயில் ஸ்டேஷன் ; சிவாலயம், ஸ்வாமி நாகேஸ்வர

நாத் மஹாதேவ்; சரயூ நதியில் உள்ள சிவலிங்கம் குசனல் ஸ்தாபிக்கப்பட்டதென்பர். இந்த லிங்கத்தில் சந்திரன், தனுஸ், திரிசூலம், கங்கை முதலிய உருவங்கள் இருக்கின் றன. இங்கு பல தர்ம சத்திரங்கள் உண்டு.

அயோத்யை பிரிவு—இதில் பல சிவாலயங்கள் உள (1) அய்ஹார்-சிவாலயம் (2) அயோத்யை பட்டணம் மான்சிங் சிவாலயம்; ஸ்வாமி மஹா தேவர் சுமார் 100 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டது. (3) சௌலி-இங்கு சில சிவாலயங்கள் புதிதாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. (4) பக்சார் சிவாலயம் ஸ்வாமி பாகேஸ்வர் ; கார்த்திகை விசேஷம். (5) பில்வாய் சுமார் 150 வருடங்களுக்கு முன் இங்கு பரமசிவத்தின் சிலே கண்டெடுக்கப்பட்டு பூஜை செய்யப்பட்டு வருகிறது. (6) பிர்ஹார் மஹாதேவர்கோயில் சிவராத்திரி விசேஷம். (7) பிஸ்வர்ன் இங்கு 12 சிவாலயங்கள் உள. (8) சிப்பியா சிவாலயம். பரமசிவம், பார்வதி, கணேசர் விக்ரகங்கள் இருக்கின்றன. (9) கௌதம்பூர் சிவாலயம். (10) மஹாதேவர் சிவாலயம் ஸ்வாமி மாலேஷ்வர்நாத் மஹாதேவ். (11) மச் சிலிகான் சிவாலயம், கர்ணநாத் மஹாதேவர். (12) கார்க்பூர் பிருத்விநாத் சிவாலயம் சுமார் 150 வருடங்களுக்கு முன் இங்கு பரமசிவத்தின் சிலே கண்டு பிடிக்கப்பட்டு, தற் காலம் பூஜிக்கப்பட்டு வருகிறது. (13) மோஹன்லால் கன்ஜ் புதிய சிவாலயம். (14) பன்கான்; இங்கு இரண்டு சிவாலயங்கள் உண்டு (14) பஹியார்பால் கணேஸ்வர்நாத் சிவாலயம். (16) பூர்வா, பில்வேஷ்வர் மஹா தேவ் சிவாலயம். (17) ராய்கர்-இங்கு மூன்று சிவாலயங்கள் உள. (18) சர்வான் பிஸ்வேஸ்வர் மஹாதேவ் கோயில். (19) சின்ஹோலி ஷஹர ஜான்பூர்; இங்கு மூன்று சிவாலயங்கள் உள. (20)டார்காவான் 3 சிவாலயங்கள்; மேடைகள் மீது சிவலிங்கங்கள் இருக்கின் றன. (21) ஹைதர்கர்-இரண்டு சிவாலயங்கள். (22) கல்யாண் மல் சிவாலயம், ஸ்வாமி பஞ்சாங்கிர் மஹாதேவ், யுதிஷ்டார் பிரதிஷ்டை யெனப்படுகிறது. (23) கண்டியாவான்-மஹா தேவர் ஆலயம். (24) காட்ரா மேதினி சிங், இங்கு7 சிவால்யங் கள் உள. (25) கேரி பிரிவு. இங்கு கோலா என்னும் கிராமத் தில் மஹாதேவர் கோயில். இங்குள்ள லிங்கத்தை ஔரங்கஜீப் அசைக்கப் பார்த்து கைவிட்டதாக சரித்தி ரம். லிங்கம் சிதைவுண்டிருக்கிறது. (26) குக்ராமைல்னி இங்கு

இரண்டு சிறிய சிவாலயங்கள் உள. (27) டாஹிர்பூர் ஜல்லி நாத் மஹாதேவ் ஆலயம். (28) மசசிலிகாவன் கார்ஹ-யு நாத் மஹாதேவர் சிவாலயம். (29) மக்ரயார் பிரிவு. புதிய மஹா தேவர் ஆலயம். (30) பட்டு பம்ரி பாலேசுர்நாத் மஹா தேவ் ஆலயம்.

அரகல்கூடு—ஹசான் ஜில்லா, மைசூர் ராஜ்யம். பழய பெயர் அர்க்கபுரி (அர்க்கன்-சூரியன்) சிவாலயம், ஸ்வாமி அர்க்கேஸ்வரர், லிங்கம் கௌதமர் பிரதிஷ்டை, கோயில் சோழ கட்டிடம்.

அரசிக்கேரே—ஹசான் ஜில்லா, மைசூர் ராஜ்யம் பெங் களூர்-பூனா ரெயில் பாதை; ஹசான் ஸ்டேஷனுக்கு 25 மயில் தூரம் 11-ஆம் நூற்றாண்டில் 1220-ஞு ஹொய்சல அரசர்களால் கட்டப்பட்டது. சிவாலயம்; ஸ்வாமி கட்ட மேஸ்வார்; கர்ப்பக் கிரஹத்தின் கதவு மிகவும் அழகிய வேலைப்பாடுள்ளது. கூரையில் நடராஜர் உருவம் இருக்கி றது. முக மண்டபம் வட்டவடிவமானது. 8 மத்தியிலும் 13 சுற்றிலுமுள்ள தூண்களால் தாங்கப்பட்டது. சளுக் கிய சில்பம். இங்கு பல சத்திரங்களுண்டு.

அரசிலி (திரு.) முந்தியார்பட்டி எனவும் வழங்கப்படுகிறது. திண்டிவனம் தாலூகா சென்னை ராஜதானி, புதுச்சேரிக்கு 7 மயில் வட கிழக்கு, வாமதேவர் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி அரசிலி நாதர், தேவி பெரிய நாயகி, அரசடி தீர்த் தம்; கல்வெட்டுகளில் ஸ்வாமி பெயர் அரசிலி ஆளுடையார் என்றிருக்கிறது; ஆலாலசுர்தார் என்றும் இருக்கிறது. திரு ஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

அரதைப் பெரும்பாழி அரித்துவார மங்கலம் (திரு.) எனவும் வழங்கப்படுகிறது. சென்னை ராஜதானி, கும்பகோணம் தாலூகா, தஞ்சாவூர் ஜில்லா, சாலியமங்கலம் ஸ்டேஷனுக்கு $7\frac{1}{2}$ மயில் வடகிழக்கிலுள்ளது. வராஹ அவதார விஷ்ணு வின் கொம்பை சிவபெருமான் முறித்த ஸ்தலம். ஸ்வாமி பாதாளேஸ்வரர் அல்லது பாதாள வரதர், தேவி பெரிய நாயகி அல்லது அலங்கார நாயகி, பிரம்ம தீர்த்தம். திரு ஞானசம்பந்தர் பாடியது.

அரந்தாங்கி மேற்படி தாலூகா, தஞ்சாவூர் ஜில்லா, ன்னை ராஜதானி: ரெயில் ஸ்டேஷன். விஸ்வநாதர்

கோயில்; கல்வெட்டுகளில் சோமீஸ்வர முடைய நாயினர் என்று ஸ்வாமி பெயர் இருக்கிறது. சத்திர முண்டு.

**அரசிற்கரைபுத்தூர் (திரு.)** அழகார் புத்தூர் என்றும், திருப் புத்தூர் என்றும் ஸ்ரீ வில்லிபுத்தூர் என்றும் அழைக்கப் படுகிறது. அரிசிலாற்றின் கரையிலுள்ளது. சிவாலயம்; ஸ்வாமி படிக்காசு அளித்த ஈஸ்வரர், தேவி அழகாம்பிகை, தீர்த்தம் அரிசிலாறு, பாஞசுர தீர்த்தம். கும்பகோணத்தி லிருந்து $4\frac{1}{2}$ மயில் தூரம். மூவர் பாடல் பெற்றது. உண்மை யாநந்த ரிஷி பூசித்த ஸ்தலம். ஸ்வாமி புகழ்த்துணை நாயனு ருக்கு படிக்காசு அளித்த ஸ்தலம்.

**அரித்தாப்பட்டி** மதுரை ஜில்லா, சென்னை ராஜதானி, மேலூருக்கும் அழகர் கோயிலுக்கும் மத்தியிலுள்ளது. சிவாலயம்; குகைக் கோயில்; பெருமாள் மலையில் வெட்டப் பட்டிருக்கிறது. கர்ப்பக் கிரஹம் 8 அடி சதுரம் 7 அடி உயரம்.

**அரியக்கோட்**—கொச்சி ராஜ்யத்தியலுள்ளது. சிவா லயம்.

**அரியத்துறை**—தென் இந்தியா சிவாலயம். ஸ்வாமி வருணகேடேஸ்வரர், தேவி மரகதவல்லி.

**அரும்பாவூர்**—திருச்சிராபள்ளி ஜில்லா, சென்னை ராஜ தானி சிவாலயம்.

**அல்லூர்**—திருச்சிராப்பள்ளி தாலூகா, சென்னை ராஜ தானி சிவாலயம். ஸ்வாமி பஞ்சததேஸ்வரர், தேவி தர்ம சம்வர்த்தனி. இங்கு பசுபதீஸ்வரர் கோயில் என்று ஒரு சிறு கோயிலுண்டு.

**அலஹாபாத்—பிரயாகை.** வட இந்தியா ரெயில் ஸ்டே ஷன்; கங்கை, யமுனை, சரஸ்வதி சங்கமமாகுமிடம். இங்கு தச அஸ்வமேத கட்டத்தருகில் சிவாலயமிருக்கிறது. **சோமேஸ்வரர் கோயில்,** யமுனையில் படகேறி ஒரு மயில் போக வேண்டும். அன்றியும் இங்கு **வட விருட்சேசர்** கோயிலில் ராஜேஸ்வர மஹாதேவர், சூல கண்டேஸ்வரர் மூர்த்திக ளுண்டு. இதற்கு கொஞ்ச தூரம் **மதனகாமேஸ்வரர்** சிவாலய முண்டு. இதற்கு 2 மயில் தூரத்தில் **நாகேஸ்வர மகாதேவர்** ஆல யம். இது சதனகர் கிராமத்தில் இருக்கிறது. **பாதர்புரி** சிவால

யம் கோட்டைக்குள் இருக்கிறது; மிகவும் பழமையானது. இங்குள்ள மஹாதேவர் விக்ரகம் புதுமையானது, அடசய விருட்சக் கோயிலுக்குள் இருக்கிறது.

அலஹாபாத் ஜில்லாவில் அடியிற் கண்ட சிவாலயங்களிருக்கின்றன. (1) தியோர்க்; சோமேஸ்வரநாத் ஆலயம் பழமையானது. (2) சியாவன் தியோடா யமுனையிலுள்ள ஒரு தீவில் சிவாலயம்; இங்கிருந்த பழய சிவாலயம் மிலேச்சர்களால் இடிக்கப்பட்டது. பிறகு சிவலிங்கம் புதிதாய்ப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. (3) இஸ்மெயில் கன்ஜ் கிராமத்தில் பாண்ட்ரா என்னும் இடத்தில் ஒரு பழய சிவாலயமுண்டு.

அவந்திபூர்—தற்காலம் வந்திபூர் என்று அழைக்கப் படுகிறது. காஸ்மீர ராஜ்யத்தில் ஜீலம் நதியின் வடகரையிலுள்ளது. இஸ்லாமாபாத்துக்கும் ஸ்ரீ நகருக்கும் மத்தியில் சிவாலயம்; அவந்தி வர்மனால் (855-882 கி. பி.) கட்டப்பட்டது. கோயில் மிகவும் கிலமா யிருக்கிறது. ஆலயம் 200 அடி நீளம் 160 அடி அகலம். ஸ்வாமி அவந்தீஸ்வரர். சிகந்தர்ஷா எனும் மகமதிய அரசனால் கோயில் பாழாக்கப் பட்டது. கிரேக்க சில்பம் கலந்த காஷ்மீரசில்பம்.

அவளிவணல்லூர்—கும்பகோணம் தாலூகா, தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி, சாலியமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 6½ மயில்; சிவபெருமான் குருக்கள் பெண்ணுக்காக மானிட உருவில் சாட்சி சொன்ன க்ஷேத்திரம், கோயிலில் இத் திருவிளையாடல் சிலையில் செதுக்கப்பட்டிருக்கிறது. வராஹ அவதார விஷ்ணுவும், காசிபரும் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி சாட்சிநாதர், தேவி சவுந்தரநாயகி, தீர்த்தம் சந்திரபுஷ்கரணி; பரமசிவம் ரிஷபவாஹனருடாய் வீற்றிருக்கிறார். பிரம்மோற்சவம் தை மாசம்.

அவனி—மைசூர் ராஜ்யம், கோலார் ஜில்லா, முளபாகல் தாலூகா; முளபாகலிலிருந்து 8 மயில் தூரம். இதை சிலர் அவந்திகை என்கின்றனர். தென் கயா க்ஷேத்திரம் என்றுமழைக்கப்படுகிறது. சிவாலயம்; ஸ்வாமி ராமலிங்கேஸ்வரர், ஸ்ரீராமர் பிரதிஷ்டை; கோயிலில் மற்ற ராமாயண வீரர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்கள் இருக்கின்றன. லவ குசர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிலை

ஆவுடையார் ஒன்றில் இரண்டு லிங்கங்கள் இருக்கின்றன. பிரம்மோற்சவம் மாசி மாசம்; சிவராத்திரி விசேஷம். சிறு குன்றின் மீது தனுக்கோடி தீர்த்தமும் பார்வதி தேவி ஆலயமுமிருக்கிறது.

அவிட்டத்தூர்—முகுந்தபுரம் தாலூகா, கொச்சி ராஜ்யம், சிவாலயம், சிறந்த மரவேலைப்பாடுள்ளது:

அவிநாசி—திருப்புக்கொளியூர் எனும் தேவாரப் பெயர் பெற்றது. எம். எஸ். ரெயில்வே மங்கலம் ஸ்டேஷனுக்கு 5 மயில் வடமேற்கிலுள்ளது. அவிநாசி-நாசமில்லாதது. கொங்கு அரசர்கள் கட்டிய ஏழு முக்கிய சிவாலயங்களில் இது ஒன்று. கோயில் பூமி மட்டத்திற்குக் கீழ் இருக்கிறது. ஸ்வாமி அவிநாசி ஈஸ்வரர், தேவி கருணாம்பிகை, முதலைத் தீர்த்தம். ஸ்தல விருட்சம் பாதிரி. சுந்தரமூர்த்தி நாயனர் முதலை வாயிலிருந்து பிராமணப் பிள்ளையை மீட்டுக் கொடுத்தருளிய ஸ்தலம் ; இந்த இடத்திற்கு புக்கொளிர் ஏரிகரையென்று பெயர். இக்கதை துவஜஸ்தம்பத்தில் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. பழய சிவாலயம்; பல கல்வெட்டுகள் உண்டு. பெரிய கல்நந்தியை உடையது. பிரளய காலத்தில் பரமசிவம் அக்கினித் தாண்டவமாடிய பொழுது, அவரை விட்டுப் பிரிந்த பார்வதி தேவியார் அப்பாபம் தீர பரம சிவத்தை எங்கு பூசிப்பது என்று வேண்ட, காசி விஸ்வநாத லிங்கத்திலிருந்து சுயம்புவாக ஒரு பாகம் பிரிக்கப்பட்டு இங்கு ஸ்தாபிக்கப்பட்டதாக ஐதிகம். பிரமோற்சவம் சித்திரை மாசம். சுந்தரர் பாடல் பெற்றது. இங்கு அருகிலுள்ள புதுப்பாளயத்தில் ஒரு சிவாலயமுண்டு.

அழிக்கல்—அல்லது வளர் பட்டணம். மலையாள தேசம் கண்ணனூருக்கு 5 மயில். கொச்சி ராஜ்யத்துப் 11-ஆம் அரசனாகிய வல்லபப் பெருமாள் இங்கு ஒரு சிவலிங்கத்தைக் கண்டெடுத்து கோயில் கட்டியதாகச் சரித்திரம் கூறுகிறது. தற்காலம் இக் கோயில் பாழாயிருக்கிறது.

அழுந்தூர்—திரு. திரு + அழுந்தூர். தற்காலம் தேரழுந்தூர் என்று மருவியது. சென்னை ராஜதானி. குற்றாலத்திற்கு 3 மயில். வேதங்களும் அஷ்டதிக் பாலர்களும் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி வேதபுரீஸ்வரர், தேவி சௌந்தராம்

பிகை. வேத தீர்த்தம், திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**அருப்புக்கோட்டை**—ராம்நாட் ஜில்லா, சென்னை ராஜ தானி. சிவாலயம் சுந்தரபாண்டியனால் கட்டப்பட்டது.

**அறையணிநல்லூர் (திரு) அறைகண்டநல்லூர்** எனவும் வழங் கப்படுகிறது. தென் ஆற்காடு ஜில்லா, சென்னை ராஜதானி. திருக்கோயிலூருக்கு அருகாமையிலுள்ளது. சிவாலயம் ஒரு சிறு குன்றின்மேற் கட்டப்பட்டிருக்கிறது. பிரிசண்ட ரிஷி பூசித்த ஸ்தலம். ஸ்வாமி அறையணி நாதேஸ்வரர் ஒப்பிலாமணீஸ்வரர், தேவி அருள்நாயகி. தீர்த்தங்கள் பெண்ணையாறு, பாண்டவ தீர்த்தம், ஆரண்ய தீர்த்தம், கல்வெட்டுகளில் ஸ்வாமி பெயர் ஒப்பு ஒருவருமில்லாத நாயனார் என்றிருக்கிறது. திருஞானசம்பந்தர் பாடல் பெற் றது. கோபுரம் 9 நிலைகள் உடையது, உன்னதமானது.

**அன்பிலாலந்துறை**—அன்பில் எனவும், திருமாலயன்துறை, திருப்பொன்பிலாலந்துறை, கீழன்பிலாலந்துறை எனவும் வழங்கப்படுகிறது. திருச்சிராப்பள்ளி தாலூகா, மேற்படி ஜில்லா, சென்னை ராஜதானி, பூதலூர் ஸ்டேஷனுக்கு 12 மயில் வடக்கிலுள்ளது. கொள்ளிடத்திக்கு வடகரை. பிரமன் விஷ்ணு இந்திரன் வாகீசர் முதலியோர் பூசித்த க்ஷேத்திரம். பிரேமபுரீஸ்வரர் கோயில்; ஸ்வாமி சத்தியவா கேஸ்வரர், ஆலத்துறைநாதர், தேவி சவுந்தரநாயகி; தீர்த் தம் காயத்ரி தீர்த்தம். ஞானசம்பந்தர் அப்பர் பாடல் பெற் றது. அப்பர் தென் கரையிலிருந்தபடியே பதிகம் பாடிய தாக ஐதிகம். இதைக்கேட்ட பிள்ளையாருக்கு செவி சாய்த்த பிள்ளையார் என்று பெயர் உளது.

**அன்னியூர்(திரு)**இது பொன்னூர் எனவும் வழங்கப்படு கிறது. சென்னை ராஜதானி ஆநந்த தாண்டவபுரம் ஸ்டே ஷனுக்கு 4. மயில்; வருணன் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி ஆபத்சகாயர், தேவி பெரியநாயகி. வருண தீர்த்தம், திரு ஞானசம்பந்தர், அப்பர் பாடியது.

**அன்னூர்**—கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி, பழய சிவாலயம்.

**அனக்காவூர்**—வட ஆற்காடு ஜில்லா, சென்னை ராஜ தானி சிவாலயம் ஸ்வாமி ஹனுமந்தேஸ்வரர், அனுமார் பூசித்த க்ஷேத்திரம்.

**அனகாபல்லே**—விசாகப்பட்டணம் ஜில்லா, சென்னை ராஜதானி. சிவாலயம்; ஸ்வாமி போகேஸ்வரர்.

**அஜெண்டா**—வட இந்தியாவிலுள்ளது. பச்சாஸ் ஸ்டேஷனிலிருந்து 30 மைல். இங்குள்ள சமணகுகைக் கோயிலில் ஒரு சிவாலயமுமிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது.

**அஹமத் நகர் பிரிவு**—பம்பாய் ராஜதானியின் ஓர் பகுதி. இப்பிரிவில் அடியிற்கண்ட ஊர்களில் சிவாலயங்கள் உள. (1) **கோகம்தான்**—பழய சிவாலயம். சுமார் 12-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. சளுக்கிய சில்ப மமைந்தது. (2) **கோல்காவன்**—சிவாலயம். ஸ்வாமி வாலகேஷ்வார். (3) **கோரேகாவன்**—சிவாலயம். ஸ்வாமி கோரேஷ்வர். லிங்கம் நான்கு முகங்களுடையது. (4) **கும்பார்**—மஹாதேவர் கோயில். (5) **லிம்பர் காவான்**—சித்தேஷ்வர் கோயில். (6) **மிரி**—போதேஷ்வர் கோயில். 1625-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. (7) **பார்நேர்**—சிவாலயம். ஸ்வாமி திரியம்ப கேஷ்வர், இங்கு **நாகநாத மஹாதேவர்**—கோயில் என்று மற்றொரு பழய கோயில் உண்டு. (8) **பெடகாவன்**—இங்கு 3 சிவாலயங்கள் உள ; **பாலேஷ்வர், மல்லிகார்** ஜுன், **ராமேஷ்வர்**. (9) **பீம்பல்வண்டி**—மஹாதேவர் கோயில். (10) **ராசின்**—சிவாலயம் ஸ்வாமி காலதேவர். (11) **ரேஜெகுறி**—சிவாலயம், ஸ்வாமி காம்நாத் மஹாதேவர். (12) **ஷ்ரிகோண்டா**—ஹக்டேஷ்வர் ஆலயம். (13) **தக்லி**—காண்டேஷ்வர் மஹாதேவ் ஆலயம். (14) **டிலாங்சி**—ஜடாசங்கர் மஹாதேவ் ஆலயம். (15) **பிரவச சங்கம்**—சித்தேஷ்வர் ஆலயம் 1823-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. (16) **அகோலா**—சிவாலயம், ஸ்வாமி சித்தேஷ்வர்; ஹேமாத் பண்ட கட்டிடம். பழய கோயில் முன்பு மண்ணால் மூடப்பட்டிருந்தது. 1780ல், வெளிப்படுத்தப்பட்டது. இவ்விடம் **கங்காதரர் கோயில்**—என்று ஒரு புதிய ஆலயமுமுண்டு. (17) **அரங்கான்**—அரனேஷ்வர் மஹாதேவ் ஆலயம். (18) **பில்வண்டி கோல்ஹார்** சிவாலயம்.

**அஹோபிலம்**—கர்னூல் ஜில்லா, சென்னை ராஜதானி நந்தியால் ஸ்டேஷனுக்கு 80 மைல். மேலை அஹோபிலத்தி லும் பல லிங்கப்பிரதிஷ்டைகள் இருக்கின்றன.

**ஆக்கூர்.** சென்னை ராஜதானி, மாயவரத்துக்கு 10½ மயில் கிழக்கு; சிவாலயத்திற்கு தான்தோன்றிமாடம் என்று பெயர். சிறப்புலி நாயனுருடைய ஸ்தலம். இந்திரன் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி, சுயம்புநாதேஸ்வரர், தேவி வாணெடுங்கண்ணி யம்மை. குமுதத் தீர்த்தம். திருஞான சம்பந்தர், அப்பர், பாடல் பெற்றது.

**ஆக்ரா** பிரிவு. வட இந்தியா ஐக்கிய மாகாணம். இப் பிரிவில் இரண்டு சிவாலயங்கள் உள. (1) **பார்த்தாலா;** ஸ்வாமி மகாதேவர், அயிலகுண்ட தீர்த்தம். விருத்திராசுர னைக் கொன்ற தோஷம் போக்க இந்திரன் இங்கு குளித்த தாக ஐதிகம். (2) **படேசர்** சிவாலயம். யமுனைக் கரையிலுள் ளது. ஸ்வாமி படேசர்நாத்.

**ஆங்கூர்.** சென்னை ராஜதானி, பல்லாரி ஜில்லா, கண் டேஸ்வரர் கோயில்; தற்காலம் பூஜை யில்லை. சளுக்கிய சில்பம். இங்குள்ள ஆலிங்கன சந்திரசேகர்மூர்த்தி பார்க் கத்தக்கது.

**ஆச்சாபுரம்.** தென் இந்தியா, சென்னை ராஜதானி, சிவாலயம், ஸ்வாமி சபாநாதேஸ்வரர்; தேவி சபாநாயகி; பிரம்ம தீர்த்தம். சிவயோகத் தியாகராஜ ஸ்வாமி கோயில் தேவி திருவெண்ணீற்றுமை; தர்மபுரம் ஆதினத்தின் மேற் பார்வைக்குட்பட்டது.

**ஆசாம்**—வட இந்தியா. இங்குள்ள சிவாலயங்கள் (1) **பேலாம்பா** கிராமம். இங்கு 12 சிவாலயங்கள் பாழடைந்து கிடக்கின்றன. (2) **கேட்லால்** கிராமம் இங்கு சிவலிங்கமும் பாழடைந்த கோயிலுமுள்ளது. (3) **ஷேர்பூர்** கிராமம், பாழ டைந்த சிவாலயம். அநாதிலிங்க ஸ்வாமி, சுயம்புலிங்கம். (4) **ஜூால்பிஸ்** கிராமம்; சிவாலயம், இது சுமார் 350 வருடங் களுக்கு முன் குச்பிஹார் அரசரால் கட்டப்பட்டது. லிங் கம் சுயம்பு என்பர். கோயில் செங்கற் கட்டிடம்.

**ஆடானை.** சென்னை ராஜதானி, திருப்புனவாயிலுக்கு 12 மயில் தெற்கிலுள்ளது. பிருகுமுனி பூசித்த க்ஷேத்தி

ரம். நீலரத்னத்தால் சிவலிங்கம் செய்து சூரியன் பூசித்த ஸ்தலம். அதனுல் ஸ்வாமிக்கு ஆதிரத்னேஸ்வரர் என்று பெயர். தூர்வாசரது சாபத்தால் ஆட்டுத் தலையும், ஆனையின் உடலும் பெற்ற பிருகுமுனிவர், அச்சாபம் நீங்கிய க்ஷேத்ரதிம்; ஆகவே ஆடானை யென்று பெயர் பெற்றது. ஸ்வாமி ஆடானைநாதர் அல்லது அஜகஜேஸ்வரர், தேவி ஸ்நேக வல்லி, சூரிய தீர்த்தம். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

ஆடூர்—சென்னை ராஜதானி, தென் கன்னட ஜில்லா காசர்கோட்டிலிருந்து 17 மயில். சிவாலயம் பழயது, சிதைந்து போயிருக்கிறது. இங்கு லிங்கம் அர்ஜுனனுல் பிரதிஷ்டை செய்யப்பட்டதாம்.

ஆண்டார் கோயில்—திரு ஆண்டார் கோயில் என வழங்கப்படுகிறது. சென்னை ராஜதானி, புதுச்சேரிக்கு அருகிலுள்ளது. பஞ்சநதேஸ்வரர் கோயில், இங்கு முதலாம் ராஜேந்திர சோழன் காலத்திய கல்வெட்டுளது.

ஆண்டிநல்லூர். சென்னை ராஜதானி, திருச்சிராப்பள்ளி தாலுகா, வட தீர்த்த ஸ்வாமி கோயில். சோழ அரசனுகிய பரகேசரிவர்மனுல் கி. பி. 10-ஆம் நூற்றுண்டில் கட்டப்பட்டது. பழய சோழ கட்டிடம்.

ஆண்டிப்பட்டி—சென்னை ராஜதானி, மதுரை ஜில்லா சிவாலயம்.

ஆண்டியூர்—பவானி தாலூகா, கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி பழய சிவாலயம். அழகிய சில்பமமைந்தது. சில கல்வெட்டுகள் உள.

ஆத்தூர்—(ஆற்று + ஊர்) சேலம் ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம்.

ஆத்தூர்—இது திருவாத்தூர் எனவும் வழங்கப்படுகிறது. சென்னை ராஜதானி, தேவக்கோட்டைக்கு அருகிலுள்ளது. சிவாலயம்; ஸ்வாமி சோமேஸ்வரர் தேவி பாதம்பிரியா நாயகி.

ஆத்தூர்—திரு ஆத்தூர், சிவாலயம். திருவாங்கூர் ராஜ்யத்திலுள்ளது.

**ஆத்நூர்.** சென்னை ராஜதானி, திருநெல்வேலி ஜில்லா சிவாலயம். திருச்சோணேஸ்வரர். ஸ்வாமி சோமநாதேஸ்வரர், தேவி சோமசுந்தரி; தாம்ரபர்ணி தீர்த்தம்.

**ஆதலூர்.** திருமெய்யம் தாலூகா, புதுக்கோட்டை சமஸ்தானம், சிவாலயம். ஸ்வாமி கைலாசநாதர்.

**ஆதனக் கோட்டை, ஆதனூர் கோட்டை.** புதுக்கோட்டை சமஸ்தானம், சென்னை ராஜதானி. சிவாலயம் குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டது.

**ஆதனூர்.** சென்னை ராஜதானி, சிதம்பரத்திற்கு அருகிலுள்ளது. சிவாலயம்; ஸ்வாமி அகஸ்தீஸ்வரர் தேவி ஆநந்தவல்லி. நந்தனார் பிறந்த இடம்.

**ஆநந்தத்தாண்டவபுரம்.** ஆனேத்தாண்டாபுரம் என்றும் பெயர், ஆநதாண்டவபுரம் என்று சாதாரணமாக அழைக்கப்படுகிறது. மாயவரம் தாலூகா, தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம். சுவாமி பாரத்வாஜேஸ்வர், பஞ்சவடீஸ்வரர்; ஸ்தல விருட்சம் ஆல். இதை பாரத்வாஜ ஆசிரமம் என்பர். பாரிஜாத வனம் என்றும் இதற்குப் பெயர். ஓர் ரிஷிக்கு நடராஜப் பெருமான் தாண்டவ தரிசனம் கொடுத்ததாக ஐதிகம். மானக்கஞ்சாற நாயினார் அவதரித்த ஸ்தலம். தேவி கலியாணசுந்தரி; பிந்து தீர்த்தம் இதற்கு கஞ்சாறு என்றும் பெயர். சப்த மாதாக்களுள் ஒருத்தியாகிய கவுமாரி பூசித்த க்ஷேத்திரம்.

**ஆப்பனூர் (திரு)** மதுரையிலுள்ளது. சென்னை ராஜதானி, வைகையின் வடகரையில் சிவாலயம். ஸ்வாமி, திருவாப்புடையார், தேவி குரவங்கமழ் குழலம்மை; ரிஷப தீர்த்தம். சோழாந்தகன் எனும் பாண்டிய ராஜன் மந்திரிக்காக, சிவபெருமான் ஓர் ஆப்பினிடத்தில் தோன்றியருளிய ஸ்தலம். திருஞானசம்மந்தர் பாடல் பெற்றது. இக்கோயிலின் பெரும்பாகம் 1760 ௵. புதுப்பித்தவர் மயிலை அருணசல முதலியார்.

**ஆப்பாடி. (திரு.)** தென் இந்தியா, சென்னை ராஜதானி திருப்பனந்தாளுக்கு 2 மயில் மேற்கு. கும்பகோணம் ரயில்

ஸ்டேஷனிலிருந்து போகவேண்டியது. சண்டேஸ்வரர் சரித்திரத்தைச் சார்ந்த ஸ்தலம். ஸ்வாமி பாலுகந்தநாதர், தேவி பெரியநாயகியம்மை. தீர்த்தம் மண்ணியாறு, பால் தீர்த்தம், ஆத்தி ஸ்தல விருட்சம். இங்கு ஆலயத்தில் ஸ்வாமிக்கு தீபாராதனை யானவுடனே சண்டேஸ்வரருக்கு தீபாராதனை ஆகிறது. இதற்கு திரு ஆயப்பாடி என்வும் பெயர். இடையன் பால் தினந்தோறும் ஓரிடத்தில் கவிழ் வதைக்கண்டு வாளால் வெட்ட இரத்தம் பெருகக் கண்டு பார்க்க, சிவலிங்கம் தோன்ற, பாலு கந்தநாதரோ என்று வேண்டியதாக ஐதிகம்; ஸ்வாமிக்கு அப் பெயர் உண்டா யிற்று. அப்பர் பாடல் பெற்றது.

**ஆபுகுண்டா.** விசாகபட்டணம் ஜில்லா, சென்னை ராஜ தானி, விசாகபட்டணத்திற்கு 13 மயில். சிவாலயம். ஸ்வாமி சோமேஸ்வரர்; இங்கு இன்னும் பல சிவாலயங்கள் உள. அவை யனைத்தும் புதியவை.

**ஆபுமலை.** வட இந்தியா ரெயில் ஸ்டேஷனாகிய ஆபு ரோட்டிலிருந்து 17 மயில். சிவாலயம். ஸ்வாமி மஹாதேவர்; அம்மனுக்கு தேவி யென்றுதான் பெயர். தீர்த்தம் அக்னி குண்டம், நாகதலாவ்.

**ஆம்பர்.** வட இந்தியா ஜெயபுரிக்கு 7 மயில், சிவாலயம். ஆம்ரவநேசர் உமாதேவி ; பழய கோயில்.

**ஆம்காட்,** அஜெய்கர் சமஸ்தானம். ராஜபுதனம்; வட மேற்கு இந்தியா; இங்கு நடு ஆற்றின் மத்தியில் சிவாலய முள்ளது. ஸ்வாமி ஜலகண்டி மஹாதேவர். இந்த சமஸ்தா னத்தில் குடார் என்னும் ஊரில் மற்றொரு சிவாலயமுண்டு. ஸ்வாமி, சதுர்முக மஹாதேவர்; இக் கோயில் எட்டாம் நூற்றூண்டில் கட்டப்பட்டது.

**ஆம்பூர்.** வேலூர் தாலூகா, வட ஆற்காடு ஜில்லா, சென்னை ராஜதானி, நாகேஸ்வரர் சிவாலயம்.

**ஆமாத்தூர்.** (திரு.) சென்னை ராஜதானி, விழுப்புரம் ஸ்டேஷனுக்கு 4 மயில் வட மேற்கு. காமதேனுவும் கோடி மகரிஷியும் ஸ்ரீ ராமரும் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி அபிராமேஸ்வரர் காமார்த்தேசுரர்; தேவி முத்தாம்பிகை.

அழகிய நாயகியம்மை; தீர்த்தம் பம்பையாறு, பத்மதீர்த்தம், பசு தீர்த்தம்; வன்னி விருட்சம். மூவர் பாடல் பெற்றது.

**ஆரக்கெரே.** மைசூர் ராஜ்யம். ஷிமோகாவுக்கு 2 மயில். துங்கை மெனும் ஆற்றின் கரையில் சிவாலயமுளது. ஸ்வாமி அர்க்கேஸ்வரர்.

**ஆமூர்.** சென்னை ராஜதானி திருச்சிராப்பள்ளி ஜில்லா, சிவாலயம். ஸ்வாமி ரவீசர், தேவி ஆநந்தவல்லி.

**ஆரப்பாக்கம்.** காஞ்சீபுரம் தாலூகா, செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம். கர்ப்பக்கிரஹம் கஜப்பிருஷ்ட ஆகிருதி, ஸ்வாமி திருவாலீஸ்வரர்.

**ஆரூர். (திரு.)** திருவாரூர். தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி, தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன். பிரபல க்ஷேத்திரம். மூவர் பாடல் பெற்றது. பூந்துருத்தி நம்பிகாட நம்பி திருவிசைப்பா பாடல்பெற்றது. பிறக்க முக்தியளிக் கும்பெரும்பதி: மனுநீதிகண்ட சோழ அரசனது ராஜதானி. சப்தவிடங்க க்ஷேத்திரங்களில் முக்கியமானது. பதினொரு திருமுறைகளை செப்பேட்டில் எழுதி தியாகராஜ சந்நதியில் அபய குலசேகர சோழ மன்னன் அர்ப்பணம் செய்த ஸ்த லம். பெரிய புராணத்தை பன்னிரண்டாம் முறையாக அந பாய சோழ மன்னன் ஸ்வாமி சந்நிதியில் அரங்கேற்று வித்த ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனர் இங்கு தேவாசிரியன் எனும் ஆயிரக்கால் மண்டபத்தில் திருத்தொண்டத் தொகை அருளிசெய்த இடம். இவர் விருத்தாசலத்தில் மணி முத்தாற்றில் இட்ட பொன்னை, பரவை நாய்ச்சியா ருக்கு, இங்குள்ள கமலாலயம் எனும் திருக்குளத்தில் எடுத் துக் கொடுத்த ஸ்தலம். சுந்தரர் பொருட்டு, ஸ்வாமி நள் ளிருளில் பரவையார் பால் தூது சென்ற ஸ்தலம். இவர் அந்தகனகிய பிறகு வலக் கண் பெற்ற மகிமையுடைய க்ஷேத்திரம். இங்கு விரன்மிண்ட நாயனர் சிவனடியார் களுக்கு பக்தி செய்தும், தண்டியடிகள் கமலாலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தும், கழற்சிங்கர் பரமசிவத்துக்குச் சாற்றும் புஷ்பத்தை யெடுத்த தன் மனைவியின் கையைக் கொய்தும், செறுத்துணை நாயனர் பூவை முகர்ந்த கழற்சிங் கரது பத்னியின் மூக்கினைக் கொய்தும், முக்தியடைந்த திவ்ய ஸ்தலம். இந்திரன் முகுந்த சக்ரவர்த்தி

பூசித்த ஸ்தலம். இங்குள்ள ஆலயத்திற்கு திரு மூலட்டா னம் என்று பெயர். இங்குள்ள கோயில் இந்தியாவிலுள்ள சிவாலயங்களில் ஒரு மிகப்பெரிய கோயிலாம். ஸ்வாமி, புற்றிடங்கொண்டார், வன்மிகநாதர்; தேவி அல்லியங் கோதை, அல்லது நீலோற்பலாம்பாள். வன்மிகம் என் ருல் புற்று என்று பொருள். ஸ்தல விருட்சம் பாதிரி; தீர்த் தங்கள், சங்கு தீர்த்தம், கமலாலயம். சுயம்புலிங்கம் ; உற் சவமூர்த்திக்கு வீதி விடங்கர் என்று பெயர். அவரது நட னத்திற்கு அஜபா நடனம் என்று பெயர். பிரம்மோற்சவம் பங்குனி மாசம். ருத்திரபாத உற்சவம் 10 நாள் விசேஷம்; உற்சவ தியாகராஜமூர்த்திக்கு எப்பொழுதும் மார்பில் கவசமிட்டிருக்கிறது. இதற்குள் பீஜீட்சரம் இருப்பதாக ஐதிகம். தியாகராஜர் விக்ரஹம் பொன்னுலாயதாம். தியாக ராஜர் சந்நிதிக்குப் பின்னுல் மஹாவிஷ்ணுவின் உருவம் இருக்கிறதென்பர். இங்கு லட்சுமி பரமசிவத்தை பூசித்து அழியாத மாங்கல்யம் பெற்றதாகப் புராணம். இங்கு தியாக ராஜர் 364 லீலைகள் இயற்றியதாகப் புராணம். தியாக ராஜர் வீற்றிருக்கும் சபைக்கு புஷ்ப சபை என்று பெயர். இங்கு இந்திரன் ஒரு சாபத்தால் பறையனுகப் பிறந்ததா கப் புராணம் கூறுகிறது. தற்காலமும் இவ்வூரில் ஆனை ஏறும் பறையன் என்று ஒரு ஜாதிப் பெயர் உண்டு. பங் குனி உற்சவத்தில் ஆனை யேறும் பறையனுக்கு கோவிலதி காரிகளால் கையில் கங்கணம் கட்டப்படுகிறது. தியாக ராஜர் ரதோற்சவத்தில் புறப்படும்பொழுது இவனுக்கு வெள்ளைப் பூச்சக்கரக் குடை மரியாதை தற்காலமும் நடக் கிறது. இங்குள்ள தேர், தென் இந்தியாவில் மிகப்பெரியது; இதை சுமார் 3000 பெயர்கள் இழுக்கவேண்டியிருக்கிறது. திருவாரூர் தேர் அழகு, என்பது பழமொழி ; இதற்கு ஆழித்தேர் என்று பெயர். சங்கு தீர்த்தம் கோயிலுக்குள் இருக்கிறது. கமலாலயம் கோயிலுக்கு பின்புறம் உள்ளது ; 18 ஏகரா விஸ்தீரணமுள்ளது ; நடுவில் ஒரு பெரிய மண்ட பம் உடையது. இதில் 64 ஸ்தானக் கட்டங்கள் உள. தியாகராஜ விக்ரஹம் விஷ்ணுவினுல் இந்திரனுக்கு கொடுக்கப்பட்டு, இந்திரனுல் முசுகுந்த சக்ரவர்த்திக்குக் கொடுக்கப்பட்டு, அவரால் திருவாரூரில் வைக்கப்பட்டதாம். இங்குள்ள கோயில் ஆதியில் சிறியதாயிருந்து பிறகு

கொஞ்சம் கொஞ்சமாகப் பெரியதாக்கப்பட்டதென்று சிற்ப சாஸ்திரிகள் கூறுகின்றனர். பெரிய கோயில் 3 பிராகாரங்கள் உள்ளது. உள் பிராகாரம் 50 ஏக்ரா விஸ்தீரணமுடையது; சுற்றிலும் நல்ல மதில்சுவர்கள் அமைந்தது; 191 அடி நிகளம், 156 அடி அகலம். இரண்டாம் பிராகாரமும் கோபுரமும் 1440-44-லில் ஆண்ட விஜயநகர் அரசர்களால் கட்டப்பட்டது. இப் பிராகாரத்தின் மேற்கு சுவரில் இரண்டாம் குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. இதில் அக்காலத்தில் நடந்துவந்த 56 உற்சவங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பிராகாரம் 470 அடி அகலமும் நிகளமும் உடையது. மூன்றும் பிராகாரம் பிறகு கட்டப்பட்டது; 957 அடி நிகளம் 726 அடி அகலம். முதல் பிராகாரத்தில் ஒரு கோபுரமும் இரண்டாம் பிராகாரத்தில் இரண்டு கோபுரங்களும் உள. கிழக்கு கோபுரம் 118 அடி உயரம். இது தற்காலம் 7 நிலைகளை உடையதாக இருக்கிறது. 11 நிலைகளுடன் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டு பிறகு ஏதோ காரணத்தினால் 7 நிலைகளாகக் குறுக்கப்பட்டதாகக் காண்கிறது. மேற்கு கோபுரம் 101 அடி உயரம், சித்தராசன் மகன் நாகராசன் என்பவரால் சுமார் 1440 ௵ கட்டப்பட்டது. மூன்றும் பிராகாரத்தில் 5 கோபுரங்கள்; இதன் வடகிழக்கு மூலையில் ஆயிரக்கால் மண்டபம் இருக்கிறது. இதில் தற்காலம் 807 கால்கள்தான் இருக்கின்றன. இவற்றுள் பாதி ஸ்தம்பங்களுக்குக் கூரை யில்லை. இம் மண்டபம் ஏதோ காரணத்தால் முடிக்கப்படவில்லை. இங்கு அழகிய சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. கோயில் சந்நிதிகளில் அசலேஸ்வார் சந்நிதிதான் மிகவும் புராதனமானது. இதில் 985-1013 ஆண்ட ராஜராஜனுடைய கல்வெட்டும், 1011-1044 ஆண்ட ராஜேந்திரனுடைய கல்வெட்டும் உளது. இக்கோயிலுள்ள ஒரு கல்வெட்டினால் 1013-1118 ஆண்டுகளில் ஆண்ட குலோத்துங்கசோழன் காலத்தில் பெரிய புராணம் இயற்றப்பட்டதாக அறிகிறோம். இரண்டாம் பிராகாரத்தின் வடக்கு சுவரில் ஒட்டு தியாகர் சந்நிதியிருக்கிறது. இங்கு விறன்மிண்ட நாயனரால் துரத்தப்பட்ட சுந்தரமூர்த்தியை ஸ்வாமி ஒளித்து வைத்ததாக ஐதிகம். இங்கு விறன்மிண்ட நாயனர் சிலை யிருக்கிறது. கர்ப்பக்

கிரஹமண்டபத்தில் அஷ்டதிக் பாலர்களுடைய உருவங்களும் 27 நட்சத்திரங்களின் தேவதைகளின் உருவங்களும் இருக்கின்றன. இங்குள்ள ஹடகேஸ்வர் கோயிலில் ஒருபிலமிருந்ததாக ஐதிகம்; எல்லோரும் இதன்மூலமாக சுவர்க்கம் புகுந்ததை தடுப்பதற்காக இந்திரன் ஒரு மலையால் இப் பிலத்தை மூடிவிட்டதாக ஐதிகம். கமலாலயத்தின் கரையிலுள்ள பிள்ளையாருக்கு மாற்றுரைத்தப் பிள்ளையார் எனப்பெயர். பெரிய கோயிலில் ராஜநாராயண மண்டபத்தை முதல்பராந்தகன் (907-947) கட்டுவித்தான். ராஜேந்திர தேவனெனும் சோழ அரசனுடைய செப்பு விக்ரஹம், விஜயதசமியன்று புறப்பாடாகிறது; இச்சிலை அந்த அரசனாலேயே செய்விக்கப்பட்டதென்பர்; வன்மீக நாதர் கோயிலும் அம்மன் கோயிலும் அக்கம்பக்கமாக இருக்கின்றன. வன்மீகநாதர் கோயில் கிழக்கு கோபுரத்திற்கு நேராக உள்ளது. தியாகராஜர் கோயில் இதன் பக்கத்திலுள்ளது. இவ்வூரில் மனுநீதிச்சோழன் பசுவின் கன்றினைக் கொன்ற தன் மகனைத் தேர்க்காலில் கிடத்தியூர்ந்து, பிறகு வீதி விடங்கப் பெருமான் திருவருளால், மகன் உயிர் பெற்றெழுந்த ஐதிகம் சிலையில் கோயிலின் கிழக்கு முனையில் வெட்டப்பட்டிருக்கிறது. புரட்டாசி மாசம் பௌர்ணமி இந்திரன் பூஜை விசேஷம். தியாகராயருக்கு தினம் செங்கழுநீர்ப் புஷ்பம் சாத்தப்படுகிறது. இங்கு செங்கழுநீர் ஓடை என்று ஒன்றுளது. தியாகராய ஆத்மலிங்கம், மரகதத்தாலாயது ஒன்று கோயிலில் இருக்கிறது. தீபாராதனை காலத்தில் தெய்வீகம் பொருந்திய சுத்த மேளம் தவிர வேறொன்றும் வாசிக்கப்படுகிறதில்லை, பெரிய கோயிலில் சண்டேஸ்வரர் இருக்கவேண்டிய ஸ்தானத்தில் யமன் விக்ரஹம் இருக்கிறது. திரு ஆரூருக்கு மற்ற பெயர்கள் :— மூலாதார ஸ்தலம், மூலதுவாதசாந்தப்புரம், அந்தர் நடனபுரம், ஆடகக்ஷேத்திரம், கெர்வபங்க க்ஷேத்திரம், தேவயாகபுரம், சக்திக்ஷேத்திரம், கல்யாணபுரம், யோகபுரம், பாடலீபுரம், கவீசல்லா நகரம். இங்குள்ள மற்ற சிவாலயங்கள். (1) பெரிய கோயிலின் அருகாமையில் **மாணிக்க நாச்சியார் கோயில்** என்று ஒன்றுண்டு. (2) **ஆரூர் அற நெறி (திரு.)** திருவாரூர் பெரிய கோயிலுக்குள், இரண்டாம் பிராகாரத்திலுள்ளது. அகில ரிஷி பூசித்த ஸ்தலம்; சிவாலயம் மேற்கி

ஆுள்ளது; அசிதரிஷி பூசித்த ஸ்தலம்; சிவாலயம் மேற்கு முகமானது. நமிநந்தியடிகளுயனுர் கமலாலயத் தண்ணீ ரால் திருவிளக்கேற்றிய ஸ்தலம். ஸ்வாமி, அகிலேஸ்வார், அல்லது அசலேஸ்வார், தேவி புவனேஸ்வரி; அற்புத கூவம் தீர்த்தம். இக்கோயில் கண்டராதித்யர் மனைவி செம்பியன்மா தேவியாரால் கருங்கற் கோயிலாகப் புதுப் பிக்கப்பட்டது சுமார் 950 ஆண்டில். அப்பர் பாடல் பெற் றது; (3) ஆரூர் பரவையுண்மண்டளி (திரு) திருவாரூரில் உள் ளது. பெரிய கோயிலின் ரதநிலைக்குச் சமீபம் உள்ளது. தென் மேற்கில் வருணன் ஒரு காலத்தில் இந்நகர் மீதனுப் பிய கடலை உண்டமையால் இப்பெயர் பெற்றது. தூர்வாசர் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி பரவையுண்மண்டேஸ்வார், தேவி பஞ்சின்மெல்லடியம்மை; வருண புஷ்கரிணி. சுந்தரருக்கு கண் கொடுத்த ஸ்தலம். (4) அழகிய சிற்றம்பலமுடையார் கோயில் (5) சத்யவாசகேஸ்வர் கோயில்; (6) ஆநந்தேஸ்வார் கோயில் (7) நாகராஜர் கோயில். இங்கு பல சத்திரங்கள் உண்டு; முக்கியமானது வடபாதி மங்கலம் முதலியார் சத்திரம்.

ஆரைப்பிள்ளையார் சத்திரம்—ஆனைப்பிள்ளை சத்திரம் என்றும் சொல்லப்படுகிறது. சென்னை ராஜதானி, திரு நெல்வேலி ஜில்லா; திருபிரம்மேஸ்வரம் என்றும் பெயர். பிரம்மா பூசித்த ஸ்தலம். ஸ்வாமி பிரமேஸ்வார், தேவி விசாலாட்சி.

ஆரைமேற்றளி—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா கும்பகோனத்திற்கு 4 மயில். சிவாலயம், ஸ்வாமி கைலாயநாதர், சபளைநாயகி; காமதேனுவின் புத்ரி சபளை பூசித்த ஸ்தலம்.

ஆவடுதுறை—(திரு.) திருவாடுதுறை என்றும் வழங்கப் படுகிறது. சென்னை ராஜதானி, இந்திரன், பல ரிஷிகள், பூசித்த ஸ்தலம். நரசிங்கன்பேட்டை ஸ்டேஷனுக்கு 2 மைல் தென் கிழக்கு. திருமூலநாயனுர் முத்திபெற்ற ஸ்த லம். திருஞானசம்பந்தர் தந்தையின் வேள்விக்காக பொற் கிழிபெற்ற க்ஷேத்திரம். அன்றியும் அவர் திருமூலநாயனு ருடைய திருமந்திரத்தை பலி பீடத்தினின்றும் எடுத்து உலகுக்கருளிய இடம். உமையம்மை ஓர் சாபத்தால் பெற்ற பசுத் தலையை இங்கு சிவபெருமானைப் பூசித்து சாபம் நீங்

கிய திவ்ய ஸ்தலம். ஸ்வாமி, மாசிலாமணீஸ்வரர், அன்றியும் கோமுக்தீஸ்வரர் என்றும் பெயர் உண்டு. தேவி ஒப்பிலா முலையம்மை; கோமுக்தி தீர்த்தம். சேந்தனர் திருவிசைப்பா பெற்றது. மூவர் பாடல் பெற்றது. திருக்கைலாச பரம்பரை நமச்சிவாய மூர்த்திகளின் பரம்பரையார் மடாலயங் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்தலம். படரரசு விருட்சம். பிரம்மோற்சவம் தை மாசம்.

**ஆவுடையார் கோயில்**—தஞ்சாவூர் ஜில்லா, தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன்; அரன்தாங்கியிலிருந்து 8 மயில். இவ்வூர் ஆளுடையார் கோயில் என்றும் வழங்கப்படுகிறது. இவ்வூருக்கு மற்றொரு பெயர் திருபெருந்துறை என்றும் வழங்கப்படுகிறது. ஸ்வாமி, ஆத்மநாதஸ்வாமி; தேவி சிவ யோக நாயகி அல்லது யோகாம்பிகை. ஸ்தல விருட்சம் குருந்தமரம். இக் கோயிலினுள்ள சிற்பங்கள் மிகவும் அருமையானவை; பார்க்கத்தக்கவை. கொடுங்கை மிகவும் விசித்திரமானது; இம்மாதிரி கொடுங்கை தற்காலம் செய்வது அசாத்தியம் என்று எண்ணப்படுகிறது. மாணிக்க வாசக ஸ்வாமிகளால பல பதிகங்கள் பெற்ற ஸ்தலம். பரமசிவம் குருந்தமரத்தின் கீழ் ஞானசாரியாராய் எழுந்தருளி, ஸ்ரீ வாதவூர் அடிகளை ஆட்கொண்டு அவருக்கு மாணிக்கவாசகர் எனும் தீட்சாநாமம் அளித்த ஸ்தலம். மாணிக்கவாசகருக்கு ஆனி மாம் 10 நாள் பிரபல உற்சவம். இங்கு முற்றிலும் ருத்திராட்சங்களால் அலங்கரிக்கப் பட்டரதம் ஒன்று விசேஷம். இவ்வூருக்கு ஆதி கைலாசம், குருந்தவனம், ஞானபுரம், திருமூர்த்திபுரம், பூலோக கைலாசம் முதலிய பல பெயர்களுண்டு. இக் கோயிலில் சிவபெருமானும், தேவியும் அருவத்திருமேனி கொண்டெழுந்தருளியிருக்கின்றனர். ஸ்வாமிக்கு அச்சவநாதர், குருந்தவனேஸ்சர் முதலிய பெயர்களுண்டு. தாமிர பட்டையங்களில் ஸ்வாமி பெயர் ஆளுடைய பரம ஸ்வாமி என்றிருக்கிறது. இங்கு ஆத்ம கணபதி, சொக்க விநயகர், சம்சர்கக விநயகர் முதலிய பல விநயகர்களுண்டு. தேவிக்கு ஆளுடைய நாயகி ஆளுடையாள் எனும் பெயர்களுண்டு. தீர்த்தங்கள், பிரம்ம தீர்த்தம், நாராயண தீர்த்தம், ருத்திர தீர்த்தம், வாயு தீர்த்தம், அசுர தீர்த்தம், தேவ தீர்த்தம், முனிவர் தீர்த்தம், அக்னி தீர்த்தம், ஆத்மகூபம் என 9 தீர்த்தங்கள்

உள. ஆவுடையார் கோயிலில் ஸ்வாமிக்கு, சமைத்த அன்னம் புகையெழும்ப நிவேதனமாகிறது. புழுங்கலரிசி அன்னம், பாகற்பாய் புளிக்கறி, அரைக்கீரைச் சுண்டல் நிவேதனம் விசேஷம். இங்கு கோயிலில் நந்திதேவரும், சண்டேஸ்வரரும் கிடையாது. குருந்தமரத்தின் மூலத்திலுள்ள மாணிக்கவாசகருடைய உருவத்திற்கு திருமூலஸ்தானம் என்று பெயர். இங்கு ஆநந்த சபை, சித்சபை, சத்சபை, தேவசபை, நிருத்தசபை, கனகசபை என்று 6 நடராஜருடைய சபைகளுண்டு. இங்கு பூஜாகாலத்தில் நட்சத்திர மாலை, கலாதீபம், வர்ணதீபம், தத்துவதீபம், புவன தீபம்; பததீபம், முதலிய விசேஷ தீபங்கள் உபயோகிக்கப்படுகின்றன. இங்கு வடகூரில் கைலாசநாதர் சந்நிதியுண்டு. காலாக்னி ருத்திரரால் பூசிக்கப்பட்டவர். விருட்சம், மகிழ். ஸ்ரீ அஸ்வாரூடனமூர்த்தி சந்நிதி கனகசபையின் தென்முகமாயுள்ளது.

இங்கு அருகிலுள்ள சிவாலயங்கள். (1) சிறுமருதூர்; சிவலிங்கம் அகஸ்தியர் பிரதிஷ்டை. கோயில் வெள்ளாற்றின் கரையிலுள்ளது. அகஸ்தியர் தீர்த்தம். (2) திருச்சிற்றம்பலம் சிவாலயம் ஊருக்கு வடக்கே யுள்ளது. ஒட்டங்காட்டிற்கு அருகிலுள்ளது. (3) சின்ன ஆளுடையார் கோயில் ராஜா மடத்திற்கு தெற்கிலுள்ளது. ஸ்வாமி ஆளுடையார்; தேவி சிவயோகாம்பிகை.

**ஆவூர்**—ஆவூர் பசுபதீச்சரம் எனவும் வழங்கப்படுபடுகிறது. சென்னை ராஜதானி சுந்தரப் பெருமாள் கோயிலுக்கு 5 மயில். ஒரு சாபம்தீர காமதேனு பூசித்த க்ஷேத்திரம்; இந்திரனும் சப்த ரிஷிகளும் பூசித்த ஸ்தலம். ஆலயத்திற்கு பசுபதீச்சரம் என்று பெயர். சிறு கோயில், ஒரு குன்றின் மீதுள்ளது; குன்றிற்கு மணிகூடம் என்று பெயர். குன்றின் அடிவாரத்தில், கல்வெட்டுகள் உள. தசரதர் பூசித்த க்ஷேத்திரம் என்பது ஸ்தலபுராணம். இவ்விடம் 5 குன்றுகளும் ஒரு சிற்றாறும் உண்டு; கோயில் பழய சோழ கட்டிடம். வைப்புஸ்தலம்.

**ஆல்வாய்**—தென் இந்தியா, மலையாள தேசத்திலுள்ளது; சிவாலயம். சிவராத்திரி விசேஷம். இங்கு முசாபர் பங்களா உண்டு.

**ஆலக் கோயில்**—சென்னை ராஜதானி, செங்கல்பட்டு ஜில்லா, ரெயில் ஸ்டேஷன். சிங்கபெருமாள் கோயில் ஸ்டேஷனுக்கு 2 மயில் வட கிழக்கிலுள்ளது. மகாவிஷ்ணு கூர்மாவதாரத்தில் சிவபிரானைப் பூசித்த க்ஷேத்திரம். இதற்கு திருக்கச்சூர் ஆலக்கோயில் என்றும் பெயர். சிவாலயம் சிறுமலை மீதுள்ளது. மலைக்கு ஔஷதகிரி என்று பெயர். அஸ்வினிதேவர்கள் பூசித்து ஔஷதங்கள் பெற்ற ஸ்தலம். திருக்கச்சூருக்கு ½ மயில் தூரம். ஸ்வாமி ஔஷதேஸ்வார் ; தேவி அந்தகாரநிவாரணி, ஔஷத தீர்த்தம்.

**ஆலங்காடு**—(திரு.) இதற்கு பழையூர் வட ஆரண்யம் என்றும் பெயர் உளது. சென்னை ராஜதானி, தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன். காரைக்கால் அம்மையார் சிவபெருமான் திருவடியடைந்த ஸ்தலம். மூஞ்சிகேச முனிவர், கார்க்கோடகன் எனும் அரவ அரசன், தேவேந்தின், ஆதிசேடன், சுனந்தர் பூசித்த க்ஷேத்திரம். வேளாளர்கள் செட்டிப் பழிக்காக தீப்பாய்ந்து புகழ்பெற்ற ஸ்தலம். நடராஜப் பெருமான் காளிக்காக ஊர்த்துவ தாண்டவம் புரிந்த இடம். இங்குள்ள நடராஜ சபைக்கு ரத்ன சபை என்று பெயர். ஸ்வாமி, தேவர் சிங்கப்பெருமாள், உளர்த்துவ தாண்டேஸ்வார், தேவி வண்டார் குழலியம்மை. முக்தி தீர்த்தம், குகதீர்த்தம், ஆலவிருட்சம், பலாவிருட்சம். பங்குனி உததிர உற்சவமும் மார்கழி ஆருத்திரா உற்சவமும் விசேஷம். இந்த க்ஷேத்திரத்தில் நிர்மால்ய தோஷமில்லை. வட ஆரண்யேஸ்வார் கோயிலில் 1178-1215 ஆண்ட மூன்ரும் குலோத்துங்கசோழன் கல்வெட்டுளது.

**ஆலங்குடி**—பாபநாசம் தாலுகா, திருநெல்வேலி ஜில்லா; சென்னை ராஜதானி ; ஆபத்சஹாயேஸ்வார் கோயில்.

**ஆலங்குடி**—இது இரும்பூளை எனும் திருஞானசம்பந்தர் பாடல் பெற்ற ஸ்தலம். சென்னை ராஜதானி, நீடாமங்கலம் ஸ்டேஷனுக்கு 4 மயில் வடக்கேயுள்ளது. விஸ்வாமித்திரர் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி காசி ஆரண்யேஸ்வார், தேவி ஏலவார் குழலியம்மை ; அமிர்தப்பொய்கை.

**ஆலங்குடிப்பட்டி**—குளத்தூர் தாலுகா, புதுக்கோட்டை சமஸ்தானம், சென்னை ராஜதானி. சிவாலயம் பழமையா

னது. தற்காலம் கிலமாயிருக்கிறது; லிங்கம் மாத்திரம் இருக்கிறது.

**ஆலம்பாக்கம்**—திருச்சிராப்பள்ளி தாலூகா, சென்னை ராஜதானி, கைலாசநாதர் கோயில். பல்லவ அரசன் நந்திவர்மனல் கட்டப்பட்டது. பிற்காலம் சோழ அரசர்களால் புதுப்பிக்கப்பட்டது என்று துப்றெயில்துரை எண்ணுகிறார்.

**ஆலம்பாடிக் கிராமம்**—கொள்ளேகால தாலூகா, கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி; பழய சிவாலயம். பாழாயிருக்கிறது. இங்கு 12 கருப்புக்கற்களாலாகிய சிவலிங்கங்கள் உள.

**ஆலம்புழை**—சென்னை ராஜதானி, மலையாளநாடு. சிவாலயம்; ஸ்வாமி வடமூலர், உமாதேவி.

**ஆலம்பொழில்**—(திரு.) சென்னை ராஜதானி, தஞ்சாவூருக்கு 6 மயில் வட கிழக்கு. திருக்கண்டியூரிலிருந்து $2\frac{3}{4}$ மயில். காசிபர், நாகர், அஷ்டவசுக்கள் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி, ஆத்மநாதர், தேவி ஞானம்பிகை. தீர்த்தங்கள், திருப்பாற்குளம் காவிநதி, ஆலவிருட்சம். சந்நிதி மேற்கு பார்த்தது. மேற்கு கோபுரம் 5 நிலையுள்ளது. அப்பர் பாடல் பெற்றது.

**ஆழியூர்**—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா சிக்கிலுக்கு 2 மயில் சிவாலயம். ஸ்வாமி, கங்காளேஸ்வார், தேவி கற்பகவல்லி; பிடாரி தீர்த்தம். வைப்புஸ்தலம்.

**ஆனிமேலா**—கடப்பை ஜில்லா, சென்னை ராஜதானி; சங்கமேஸ்வார் கோயில். மொகமேருவும் பாபக்னியும் சங்கமமாகும் இடம். கோயில் பெரிய கோபுரங்களுடையது. கர்ப்பக் கிரஹம் சிறந்த சில்பமமைந்தது.

**ஆள்வார் திருநகரி**—அல்லது திருக்குருகூர், திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி, (பிரபல வைஷ்ணவ ஸ்தலம்) இங்கு ஒரு சிவாலயமுண்டு. திருக்காந்தீஸ்வார் கோயில். ஸ்வாமி திருக்காந்தீஸ்வார், தேவி தர்மசம்வர்த்தனி, தாம்ரபர்ணி நதி. அகஸ்தியர், கருர்தேவர் பூசித்த ஸ்தலம்.

**ஆனூர்**—இதற்கு ஆனியூர் என்றும் ஆதியூர் என்றும் பெயர் உண்டு; பொன் விளைந்தகளத்தூருக்கு அருகிலுள்ளது; செங்கல்பட்டு ஜில்லா, சென்னைராஜதானி. பாலாற்றின் கிழக்கிலுள்ளது. இதற்கு பூர்வீகப் பெயர் சத்தியாஸ்ரயகுலகால சதுர்வேதி மங்கலம். ஸ்வாமி அஸ்தபுரீசர், திருவம்பலமுடையார், தேவிசௌந்தராம்பிகை. அகஸ்தியர் காமதேனு, சத்யாஸ்ரயர் முதலியோர் பூசித்த ஸ்தலம். பானுதீர்த்தம், கௌரி தீர்த்தம், கந்த தீர்த்தம் முதலிய தீர்த்தங்கள் உடையது. இதற்கு அருகில் **சொக்கநாதேஸ்வரர் கோயில்** என்னும் சிவாலயம் ஒன்றுண்டு.

**ஆறுகாடு**—சென்னைராஜதானி வட ஆற்காடு ஜில்லா சிவாலயம்; ஸ்வாமி ஏகாம்பரநாதர், தேவி காமாட்சியம்மன்.

**ஆனகரே**—மேற்கு இந்தியாவிலுள்ளது. பொன்னணி தாலுகா மலபார் ஜில்லா; சிவாலயம்.

**ஆனெகோண்டா**—மைசூர் ராஜ்யம். சிவாலயம் பாழடைந்திருக்கிறது.

**ஆனைக்கா**—திருவானைக்காவல் ஜம்புகேஸ்வரம் என்னும் பிரபல சிவஸ்தலம், தென் இந்தியா, சென்னை ராஜதானி திருச்சிராப்பள்ளிஜில்லா; ஸ்ரீரங்கம் ரெயில் ஸ்டேஷனுக்கு ½ மைல். மூவர் பாடல்பெற்ற திவ்ய ஸ்தலம். பஞ்சலிங்கங்களில் ஒன்றாகிய அப்புலிங்கம் இங்குளது, அதாவது ஜலலிங்கம். மூலஸ்தானத்தில் எக்காலமும் ஜலம் வந்துகொண்டிருக்கிறது. சம்ஸ்கிரதத்தில் இந்த க்ஷேத்திரத்திற்கு **ஜம்புகேஸ்வரம்** என்று பெயர். ஜம்புநாவல் விருட்சத்தின் அடியில் பரமசிவம் எழுந்தருளியிருக்கிறபடியால் அப்பெயர் பெற்றது. வெள்ளையானை பூசித்தபடியால் **ஆனைக்கா எனும்** பெயர் பெற்றது; இதுதான் தேவாரப்பெயர். ஓர் சிலந்தியும் ஸ்வாமியை இங்கு பூசித்ததாக ஐதிகம்; கௌதமர் சம்பு முனிவர் பூசித்ததலம். உறையூர் சோழன் கழுத்திலிருந்து காவிரியில் நழுவிய பதக்கம் திருமஞ்சனக்குடத்தில் அகப்பட்டு, ஸ்வாமி கழுத்தில் விழுந்ததாக ஐதீகம். ஸ்வாமிபெயர் ஜம்புகேஸ்வரர், தேவி அகிலாண்டநாயகி. தீர்த்தம் சந்திரபுஷ்கரணி, காவிரி; ஸ்தல விருட்சம் வெள்ளைநாவல் மரம். பிரம்மோற்சவம் ஆனிமாசம். தற்கால ஆலயம் கோச்செங்கட் சோழநாயனரால் கட்டப்பட்

டதாம். இங்குள்ள கடைசி பிராகாரத்தின் மதிலுக்கு நீறிட்டான்மதில் என்றுபெயர். அம்மதிலைக் கட்டியவர்களுக்கு கூலி திருநீறே கொடுக்கப்பட்டதாம். பங்குனி மாசம் பஞ்சப்பிரகார உற்சவம் விசேஷம். கோயில் பெரியது; 2400 அடி × 7500 அடி. ஐந்து பிராகாரங்களுடையது. ஐந்தாம் பிராகாரத்தில் நான்கு வீதிகள் உண்டு. நான்காம் பிராகாரம் 812 × 497 கஜம். இங்கு ஆயிரக்கால் மண்டபம் உண்டு. இதில் 796 கால்கள்தானிருக்கின்றன. கோயில் குளம் மிகவும் அழகியது. இதைச் சுற்றிலும் பிராகாரமண்டபம் உண்டு. இங்குள்ள கல்வெட்டுகளினால்தற்காலக் கோயில் 1000 வருடங்களுக்குமுன் கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று டாக்டர் பெர்கூசன் எனும் ஆங்கில சிற்ப சாஸ்திர நிபுணர் கூறுகிறார்; ஒரே காலத்தில் ஆரம்பிக்கப்பட்டு, முடிக்கப்பட்டது என்று எண்ணுகிறார்; சில்ப சாஸ்திரத்தின்படி மிகவும் அழகுவாய்ந்ததெனவும் நினைக்கிறார். தற்காலம் கோயிலின் சிலபாகம் கிலமாயிருக்கிறது. அகிலாண்டேஸ்வரி சந்நிதியில் யானை லிங்கத்தை பூசித்தகதை சில்பத்திலிருக்கிறது. இங்கு அம்மன் ஸ்வாமியை பூசித்ததற்காக இப்பொழுதும் மத்யான பூசையில் குருக்கள் பெண் உடையணிந்து பூசைசெய்கிறார். இக்கோயிலுள்ள ஏகபாத ருத்திரமூர்த்தியின் சிலை பார்க்கத்தக்கது. பெரிய கோயிலில் 1236 ஆம் ஆண்டில் ஆண்ட சோமேஸ்வரன் என்னும் ஹொய்சல அரசனால், வல்லாள ஈஸ்வரர்கோயில் பதுமனீஸ்வரர்கோயில் வீரநரசிம்மேஸ்வரர்கோயில் சோமனீஸ்வரர் கோயில் என்னும் சிறு கோயில்கள் கட்டப்பட்டன. இங்குள்ள பெரிய கோபுரம் அவனால் கட்டப்பட்டிருக்கலாம் என்பர். இங்கு பல கல்வெட்டுகள் உள. அதில் 1251 ஆல் ஆள ஆரம்பித்த ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திய கல்வெட்டு ஒன்றுளது.

**ஆனையூர்**—சென்னை ராஜதானி, மதுரை ஜில்லா, உசிலம் பட்டிக்கு அருகிலுள்ளது. சிவாலயம், இந்திரனது யானை பூசித்து சாபம் நீங்கினபடியால் ஆனையூர் எனப் பெயர் பெற்றதாம். ஸ்வாமி ஐராவதேஸ்வரர்.

**ஆனைகுந்தி**—சென்னை ராஜதானி பல்லாரி ஜில்லா, கபிலேஸ்வரர் கோயில்.

**ஆஸ்கா**—சென்னைராஜதானி, கஞ்சம் ஜில்லா சிவா லயம்.

**இக்கேரி**—ஷிமோகா ஜில்லா, மைசூர் ராஜ்யம் சிவால யம் அகோரேஸ்வரர். பெரிய கோயில், அழகியது; கெலாடி அரசர்களால் கட்டப்பட்டது. திராவிட சில்பம்.

**இட்டாகி**—(இட்டகி) நிஜாம் ராஜ்யம், ராய்ச்சூர் ஜில்லா, கடக்ஸ்டேஷனிலிருந்து 21 மயில் வடகிழக்கு. சிவாலயம். மஹாதேவர் எனும் தண்டநாயகரால் 1112 ஆு கட்டப்பட்டது. இடிந்திருக்கிறது. சாளுக்கிய சில்பம். மண் டபத்தின் கரையிலுள்ள நடராஜருடைய உருவம் பார்க்கத் தக்கது. கோயிலில் தற்காலம் பூசையில்லை. சிகரம் அழிந்திருக்கிறது. தூண்கள் அழகியவை. கோயில் 120 × 66 அடி விஸ்தீரணம்; ஸ்வாமி பெயர் மஹாதேவேஸ்வரர் ஹலபீடுக்குப் பிறகு இதுதான் சிறந்த கோயில் இங்கு.

**இடக்காடு**—சென்னை ராஜதானி உதகமண்டத்திற் கருகிலுள்ளது. மகாலிங்கஸ்வாமி கோயில்.

**இட்வாபிரிவு**—ஐக்கியமாகாணம் சார்சைன்வார் என்னு மிடத்தில் சிவாலயம். ஸ்வாமி ஹஜாரிமகாதேவ்.

**இடும்பாவனம்**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னைராஜதானி. திருத்துறை பூண்டி ஸ்டேஷனுக்கு 10 மயில் தென்மேற்கு; இடும்பன் பூசித்த க்ஷேத்திரம்; ஸ்வாமி சற்குண நாதேஸ் வரர்; தேவி மங்களநாயகி—குசும தீர்த்தம். பழய சிவால யம்; இங்கு மறிப்பவர்களுக்கு மரணகஷ்டம் இல்லையென் பது ஐதிகம். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**இடைச்சுரம்**—சென்னைராஜதானி, செங்கல்பட்டு ஸ்டே ஷனுக்கு 5½-மயில், கிழக்கிலுள்ளது. சனத்குமாரர், கௌதமர் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி இடைச்சுரநாதர், ஞானபுரீஸ்வரர்; தேவி இமயமடக்கொடி. மதுரதீர்த்தம், இந்திர தீர்த்தம், இங்குள்ள மலைக்கு நந்திமலை யென்று பெயர்; திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**இடைமருதூர்**—திருவிடைமருதூர் என்று சாதாரண மாக வழங்கப்படுகிறது ரெயில் ஸ்டேஷனில் திருவடமரு தூர் என்றிருக்கிறது. சென்னை ராஜதானி கும்பகோணம் தாலூகா தஞ்சாவூர் ஜில்லா. இதற்கு சம்ஸ்கிருதத்தில் மத்யார்ஜுனம் என்று பெயர். ஸ்ரீ சைலம் எனும் மல்லி

கார்ஜுனத்திற்கும், அம்பாசமுத்திரத்திற்கு அருகிலுள்ள ஸ்புடார்ஜுனம் எனும் திருப்புடை மருதூருக்கும், மத்தியிலுள்ள ஸ்தலமாதலால், இது மத்யார்ஜுனம்,இடைமருதூர், என்று பெயர் பெற்றது. வரகுணபாண்டியன் சோழப் பிரம்மஹத்தியை நிவர்த்தித்த ஸ்தலம். ருத்திரர், உமை, விநயகர், முருகர், பிரம்மா, விஷ்ணு முதலியோர் பூசித்த க்ஷேத்திரம். காவிரிக்கரையிலுள்ளது—தைப்பூசஸ்நானம் விசேஷம். ஸ்வாமி ம்ருதப்ப ஈஸ்வரர், மஹாலிங்கேஸ்வரர், தேவி பிரஹத்சுந்தா குசாம்பிகை. தீர்த்தம், காவிரி பூசற்றுறை, சுகுணநிதி தீர்த்தம். ஸ்தல விருட்சம் மருதம். பெரிய கோயில் சப்த பிராகாரங்களுடையது. கோயில் பிராகாரம் சுற்றிவருவதற்கு அஸ்வமேதப் பிரதட்சிணம் என்று பெயர்; அஸ்வமேதயாகப்பலனை அளிப்பதாம், உலகினைச் சுற்றிவரும் பலனையும் அளிப்பதாம். பிரம்மஹத்தியின் உருவம் பூர்வ கோபுரவாயிலின் வலப்புறமுள்ளது. இக்கோயிலில் சித்திரப்பிரகாரம் என்று ஒன்று உளது—பார்க்கத்தக்கது. பட்டினத்தார் சிலை கிழக்கு கோபுரவாயிலிலிருக்கிறது. பத்திரகிரியார் சிலை மேற்கு கோபுரவாயிலிலிருக்கிறது. மேற்கு கோபுரத்திற்கு விஜயாலய சோழன் திருப்பணிசெய்தார். ஒரு பிராகாரத்தில் ஆச்சரியகரமான பிரதிதொனி உளது. பித்தம்பிடித்தவர்கள் பிராகாரத்தை 12முறை வலம் வந்தால் பித்தம் நீங்குமென்பது ஐதிகம். ஆலயத்தின் வடபுறம் ஒரு விஷ்ணுகோயிலிருந்ததாகவும், அது பிறகு அகற்றிவிடப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. கோயிலில் ஸ்வாமி கல்யாண சமயத்தில, தாரை வார்த்துக்கொடுக்க விஷ்ணுவின் விக்ரஹம் ஒன்றிருக்கிறது. அம்மன்கோயில் ஸ்வாமி கோயிலுக்கு வெளியே உள்ளது. ஸ்வாமி கோயிலும் அம்மன் கோயிலும் அக்கம் பக்கமாக இருக்கின்றன; இரண்டும் கிழக்கே பார்த்தவை. இக்கோயிலில் இரண்டு அம்மன்களுண்டு, மூகாம்பிகை. பிரஹத்சுந்தர குசாம்பிகை. இக்கோயிலில் சில சளுக்கிய சில்பஸ்தம்பங்கள் இருக்கின்றன. பிரம்மோற்சவம் தை மாசம், ஐந்தாம்நாள் மஹாலிங்கஸ்வாமி ஆத்ம பூசைசெய்யும் உற்சவம் விசேஷம். வைகாசி மாசம் நடக்கும் வசந்தோற்சவகாலத்தில் மஹாலிங்கஸ்வாமி கலியாண உற்சவம் பிரபலமானது. இக்கோயிலில் 150-க்கு மேற்பட்ட கல்வெட்டுகள் இருக்கின்றன; அவற்றுள் சில 1000 வருடங்க

ளுக்கு மூற்பட்டவை. அவற்றுள் ஒன்றில் இக்கோயிலுக்கு பெயர் திருவிடைமருதூர் ஆள்வார்கோயில் என்றிருக்கிறது. மற்றொன்றில் இங்கு ஆடல்விடங்கதேவர் சிலை இருந்த தாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. இதனால் இங்கு பூர்வம் தியாகராஜருடைய விக்ரஹம் இருந்ததாக ஊகிக்கலாம். பூர்வம் இங்கு ஆரியக்கூத்தும், அபிநயக்கூத்தும் நடந்த தாகத் தெரிகிறது. இவ்வூர் உற்சவமூர்த்திக்கு ஏகநாயக மூர்த்தி என்று சிறப்புப் பெயர் உண்டு. கோயிலுக்கு ½ மயில் தூரத்தில் ஒரு நல்ல சத்திரமுண்டு. பிரசித்திபெற்ற திருவாவடுதுறை பண்டாரசந்நிதி யவர்களின் மடம் ஒன்று இங்கிருக்கிறது. மூவர் பாடல்பெற்ற க்ஷேத்திரம்; திரு விசைப்பாவும் பெற்றது. இங்கு மூசாபர் பங்களா உண்டு. பல சத்திரங்களும் உள.

**இடையாறு**—(திரு)சென்னைராஜதானி, மாம்பழ ஸ்டேஷ னுக்கு 9 மயில் தென்மேற்கு; சுகர் பூசித்த சிவாலயம். ஸ்வாமி—இடையாற்றீஸ்வரர்; தேவி சிற்றிடைநாயகி; தீர்த் தம்-பெண்ணைநதி; சுந்தரர் பாடல்பெற்ற ஸ்தலம்.

**இந்திரநீலப்பர்வதம்**—இமயமலையிலுள்ளது. காட்மாண்டு வுக்கு 80 மயில் வடமேற்கு. தேவேந்திரன் பூசித்த ஸ்தலம்; அர்ச்சுனன் பூசித்து பாசுபதம் பெற்ற ஸ்தலம். ஸ்வாமி நீல அசலநாதர். தேவி—நீலாம்பிகை. இந்திர தீர்த்தம். திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது.

**இந்தூர்**:—வடஇந்தியா ரெயில்வேஸ்டேஷன். சிவால யம்-ஸ்வாமி மஹாதேவர்; தேவி-பார்வதி. இங்கு ஒரு சத்திர முண்டு.

**இயோட்மல் பிரிவு**—மத்திய மாகாணம். இங்கு அடியிற் கண்ட சிவாலயங்கள் உள. (1) **டிக்ராஸ்** சிவாலயம் ஸ்வாமி-மல்லிகார்ச்சுனர். (2) **காய்** சிவாலயம், பெரியது, ஹேமாத்பண்ட கட்டிடம். இங்கு வற்றாத வெந்நீர் ஊற்று உண்டு. சிவராத்ரி விசேஷம். (3) **மஹாகாவன்** சிவாலயம் ஸ்வாமி-கமலேஷ்வர் இங்கு கோயிலில் 18 தூண்களை யுடைய சபாமண்டபம் ஒன்றுளது. பார்க்கத் தக்கது. (4) **பூசாம்** ; சிவாலம் பழயஹேமாத்பண்ட கட்டிடம்; இப்பொ ழுது புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. ஸ்வாமி-மஹாதேவ். (5) **சதேபால்** ; கபிலேஷ்வர் கோயில். (6) தபோண-**காசி விஸ்வ** நாதர் கோயில்.

**இரட்டைமலை**—சென்னை ராஜதானி, சிவாலயம். ஸ்வாமி கூலத்தீஸ்வரர், தேவி-மீனும்பிகை.

**இரணியூர்**—செட்டிநாட்டிலுள்ளது சென்னை ராஜதானி. சிவாலயம். ஸ்வாமி ஆட்கொண்டநாதர்-தேவி ஸ்ரீ சிவபுரம்தேவி.

**இரிஞ்சல்கூட**—கொச்சி ராஜ்யத்திலுள்ளது. தென் இந்தியா; கூடல் மாணிக்கம்கோயில், சிவாலயம். ஒரு பண்டாரசந்நிதியின் மேற்பார்வையிலிருக்கிறது. முக்கிய உற்சவம் சித்திரை மாசம்.

**இரும்பைமாகாளம்**—சென்னை ராஜதானி, விழுப்புரம் தாலூகா புதுச்சேரிக்கு 5 மயில் வடகிழக்கு. மாகாளர் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி மாகாளேஸ்வரர் தேவி-குயில் மொழி அம்மை—மாகாளதீர்த்தம் ; திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது.

**இருக்குவேளூர்**—இதற்கு பேளூர் என்று மற்றொரு பெயர்; சென்னை ராஜதானி, கணம்புல்ல நாயனர் அவதரித்த ஸ்தலம். சிவாலயம் கட்டி முதலியார்கள் கட்டியது. சிவாலயத்தில் கணப்புல்லர் திருவுருவம் செதுக்கப்பட்டிருக்கிறது.

**இருளப்பாடு**—நஞ்சராவ் தாலுகா, குண்டூர் ஜில்லா, சென்னை ராஜதானி, சோமேஸ்வரர் கோயில்.

**இலம்பையங்கோட்டூர்**—சென்னை ராஜதானி, கடம்பத்தூர் ஸ்டேஷனிலிருந்து 8½ மயில்; தக்கோலத்திற்கு 2 மயில் தென்மேற்கு. சந்திரன், தேவகன்னியர் பூசித்த க்ஷேத்திரம். இவ்வூரில் கிறிஸ்தவர்கள் மேலிட்டபடியால் கூவத்திலிருந்து பிரதிதினம் குருக்கள் ஒருவேளை இங்கு வந்து பூசைசெய்து போகிறார். ஸ்வாமி சந்திரசேகரர், தேவநாயகர்; தேவி-கொடேந்துமூலையம்மை. சந்திர தீர்த்தம். திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது.

**இலுப்பூர்**—திருச்சிராப்பள்ளி ஜில்லா, சென்னை ராஜதானி, திருச்சிராப்பள்ளிக்கு 26 மயில். சிவாலயம். அழகிய மண்டபமுடையது. இங்கு ஒரு சுரங்கம் உளது.

**இலைப்பையங்குடி**—திருப்பத்தூர் தாலூகா ராமநாதபுரம் ஜில்லா, சென்னை ராஜதானி ; ஸ்ரீ சுயம்பிரகாச ஈஸ்வரர் கோயில்-ஸ்வாமி சுயம்பிரகாசர்.

**இலையூர்**—தென் இந்தியாவிலுள்ள கிராமம். சிவாலயம் ஏனாதி நாயனார் பூசித்த தலம்.

**இளங்காடு**—சென்னை ராஜதானி திருக்காட்டுப்பள் ளிக்கு 2 மயில் தூரம் சிவாலயம். ஸ்வாமி விஜயேசர்; தேவி பாலசுந்தரி.

**இளவனேஸ்வரம்**—தென் இந்தியா சென்னை ராஜ தானி, சிவாலயம், சுவாமி மார்த்தேண்டேஸ்வரர்-தேவி பிரஹந்நாயகி ; சூல தீர்த்தம்.

**இளவனேசூர்**—சென்னை ராஜதானி, திருக்கோயி லூருக்கு 21 மயில். சிவாலயம், கர்ப்பக்கிரஹலிங்கம் உயர்ந்த பீடத்திலிருக்கிறது. நந்தி ஸ்வாமியை நோக்காது எதிர்புறம் பார்க்கிறது.

**இளையாத்தங்குடி**—சென்னை ராஜதானி ராமநாதபுரம் தாலூகா. காரைக்குடியிலிருந்து 12 மயில். சிவாலயம். ஸ்வாமி-கைலாசநாதர், தேவி-நித்யகல்யாணியம்மன். 1939 ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டு நகரத்தாரல் கும்பாபி ஷேகம் செய்யப்பட்டது.

**இளையான்குடி**—சென்னை ராஜதானி காளையார் கோயி லருகிலுள்ள சிவஸ்தலம். இளையான்குடி மாறநாயனார் முத்திபெற்ற ஸ்தலம்.

**இறும்பலி**—சென்னை ராஜதானி புதுக்கோட்டை சமஸ் தானம். புதுக்கோட்டைக்கு 8 மயில். சிவாலயம், இடிந் திருக்கிறது.

**இறும்பாநாடு**—புதுக்கோட்டை சமஸ்தானம். திரு மெய்யம் தாலுகா, அகஸ்தீஸ்வரர் கோயில்.

**இன்னம்பர்**—சென்னை ராஜதானி, கொட்டை யூருக்கு 2 மயில் வடமேற்கு கும்பகோணத்திலிறங்கிப் போகவேண்டும். சிவாலயம். விமானம் விசித்திரமானது. சிவ்பெருமான் கணக்காரய் கணக்குகூறியதலம். அகஸ்தி தியர் பூசித்து இலக்கணுபதேசம் பெற்ற ஸ்தலம். ஸ்வாமி எழுத்தறிநாதேஸ்வரர் அல்லது எழுத்தறி நாயகர்-தேவி கொந்தார் பூங்குழலம்மை. மற்றொரு அம்மனும்உண்டு. ஐராவத தீர்த்தம். திருஞான சம்மந்தர் அப்பர் பாடல் பெற்றது. 5 நிலை கோபுர முடையது. ஒன்பது பத்தாம்

நூற்றாண்டுகளில் சோழ அரசர்கள் பழுது பார்த்திருக்கின்றனர்.

**இனுமெல்லா**—சென்னை ராஜதானி. வீறுகொண்டா தாலுகா, குண்டூர் ஜில்லா, சிவாலயம். ஸ்வாமி வீரபத்ரேஸ்வரர்.

**இஷ்டிகபுரம்**—வட இந்தியா, சிவாலம் சுயம்பு லிங்கம். ஸ்வாமி-வரிஷ்டேஸ்வரர். கோயில் ஆரிய சில்பம்.

**ஈங்கோய்மலை**—திரு + ஈ + ஓங்கியமலை. திருலிங்காதமலை-வெங்கமலை என்றும் அழைக்கப்படுகிறது. சென்னை ராஜதானி, திருச்சிராப்பள்ளி ஜில்லா குளித்தலை ஸ்டேஷனுக்கு 2 மயில் வடமேற்கு. அகஸ்தியர் ஈ ரூபராய்ச் சென்று சிவபெருமானை தரிசித்த ஸ்தலம். ஸ்வாமி-மரகதாசலர், தேவி-மரகதாம்பிகை. அமிர்த தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம்; திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது. மரகதலிங்கம், கர்ப்பூரம் ஏற்றினல் மரகதமாகத் தோன்றுமென்பது ஐதிகம்.

**ஈசனூர்**—சென்னை ராஜதானி தஞ்சாவூர் ஜில்லா, சிவாலயம்; கிலமாயிருக்கிறது. வைப்புஸ்தலம்.

**ஈரோட்டு**—சென்னை ராஜதானி, கோயமுத்தூர் ஜில்லா ரெயில்ஸ்டேஷன் இரம் + ஓடு + ஈரோடு என்று ஆயதென்பர். சிவாலயம் 1340 ஆண்டு வல்லாள அரசனது காலத்திய கல்வெட்டொன்று கோயிலிலிருப்பதால் இக்கோயில் அதற்கு முன் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஸ்வாமி-ஆர்த்ர கபாலீஸ்வரர் (கையில் ஈரமான கபாலமுடையவர்) கல்வெட்டுகளில் ஸ்வாமி பெயர் தொண்டீஸ்வர முடையார் என்றிருக்கிறது. ஸ்டேஷனுக்கருகில் ஒரு பெரிய சத்திரமுண்டு; முசாபர் பங்களாவும் உண்டு.

**ஈஸ்வர்டி**—சென்னை ராஜதானி திருநெல்வேலி ஜில்லா நாங்குநெறி தாலுகா, சிவாலயம். ஸ்வாமி திருவேட்டீஸ்வரர்.

**உக்கல்**—சென்னை ராஜதானி, சிவாலயம். பல்லவ கட்டிடம். பல பழய கல்வெட்டுகள் உள. அவைகளில் இவ்வூருக்கு அபராஜித சதுர்வேதி மங்கலம் என்று பெயர் இருக்கிறது. அபராஜிதர் எனும் பல்லவ அரசனல் கட்டப்பட்டிருக்கலாம். தற்காலம் கிலமாயிருக்கிறது.

**உங்கல்**—தென் மஹாராஷ்டிர ரெயில் ஸ்டேஷன். ஹுப்ளிக்கு 3 மயில் வடக்கு. **சந்திர மௌளீஸ்வரர் கோயில்**; சளுக்கிய கட்டடம். கோயிலுக்கு 4 வாயில்கள் உள. கசின்ஸ் என்பவர் இது பூர்வம் பிரம்மாவின் கோயிலாயிருந்து பிறகு சிவாலயமாக மாற்றப்பட்டதென எண்ணுகிறார்.

**உடுமலைப் பேட்டை**—சென்னை ராஜதானி, பழனிக்கு 2 மயில். சிவாலயம். இதற்கு திரிமூர்த்தி கோயில் என்று பெயர். ஆதியில் பௌத்தாலயமாயிருந்து சிவாலயமாக மாற்றப்பட்டதென்பர்.

**உச்சங்கிதுர்க்**—ஹர்ப்பனபல்லி தாலுகா, பல்லாரி ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம் அதிக கிலமாயிருக்கிறது.

**உடுப்பி**—உடுப்பி தாலூகா, தென் கன்னட ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம். ஸ்வாமி-அநந்தேஸ்வரர், தேவி-அநந்தநாயகி. பழய கோயில். உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலுக்கு அருகில் உள்ளது. சிவராத்ரி விசேஷம். இவ்வூரில் **மஹாலிங்கேஸ்வரர்** கோயில் என்று ஒரு கோயிலுமுண்டு.

**உடையார்கோயில்**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி, கரவண்டீஸ்வரர் கோயில். கல்வெட்டுகளில் திருக்கிளாவுடையார் கோயில் என்றிருக்கிறது. ஸ்வாமி பெயர் ஆதிசண்டேஸ்வரர் என்றிருக்கிறது.

**உடையார் பாளையம்**—திருச்சிராப்பள்ளி ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம். ஸ்வாமி பயரணிமஹாலிங்கர். பக்தனுடைய வேண்டுகோளுக்கிறங்கி மிளகைப் பயராக மாற்றியதாக ஐதிகம். காண்டீப தீர்த்தம்; அர்ஜுனன் பாணத்தினால் உண்டான தீர்த்த மென்பர். இதில் தவளைகள் வசிப்பதில்லையாம்.

**உடையூர்**—தென் இந்தியா சிவாலயம். ஸ்வாமி-பாசுபதேஸ்வரர்; தேவி-அகிலாண்ட நாயகி.

**உண்டவல்லி**—குண்டூர் தாலூகா, மேற்படி ஜில்லா, சென்னை ராஜதானி. இங்கு 2 சிவாலயங்கள் உள. (1) **பாஸ்கரேஸ்வர** ஸ்வாமி கோயில், **பீமேஸ்வர** ஸ்வாமி கோயில்.

**உத்தம சோழபுரம்**—வேலூர் தாலூகா, வட ஆற்காடு ஜில்லா சென்னை ராஜதானி. சிவாலயம். ஸ்வாமி கரபுர முடைய நாயினர்.

**உத்தம தானபுரம்**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜ தானி. பாபநாசத்திற்கு அருகிலுள்ளது. சிவாலயம். ஸ்வாமி விஸ்வநாதர்; தேவி-ஆநந்தவல்லி. இங்குள்ள கணபதிக்கு மஹாகணபதி என்று பெயர். தஞ்சாவூர் அரசர் ஒருவரால் அக்கிரகாரம் கட்டி தானம் செய்யப்பட்டபடியால் இவ்வூர் அப்பெயர் பெற்றது. ஆலயம் சிறியது. தற்காலத்திய திரா விட கட்டிடம்.

**உத்தம பாளையம்**—மதுரை ஜில்லா, சென்னை ராஜ தானி, காளத்தீஸ்வரர் கோயில்.

**உத்தரகோசமங்கை**—சென்னை ராஜதானி, ராமநாத புரத்திற்கு 10 மயில். சத்திரக்குடி ஸ்டேஷனுக்கு 6 மயில். சாண்டில்ய ரிஷி, கங்கை, பூசித்த ஸ்தலம். ஸ்வாமி-உத்தர கோசர், மங்களேஸ்வரர்; தேவி-உத்தரகோசமங்கை. 2 பெரிய உற்சவங்கள், மாசி, ஆடி மாசங்களில். கிழக்கு கோபுரம் உன்னதமானது. கர்ப்பக்கிரஹம் தஞ்சாவூர் கோயில் விமானத்தைப்போன்றது; ஆனல் பழைய கல் வெட்டுகள் இல்லை. திருவாசகப் பாடல் பெற்றது.

**உத்திரமேரூர்**—மதுராந்தகம் தாலூகா சென்னை ராஜ தானியிலுள்ளது. ராஜேந்திர சோழன் காலத்தில் (1064—1080) இதற்கு சதுர்வேதி மங்கலம் என்று பெயர். இங்கு 5 சிவாலயங்கள் உண்டு; பெரும்பாலும் பாழடைந்திருக்கின் றன; ஆதிகாலத்தில் இவைகள் புத்த ஆலயங்கள்போல் கட்டப்பட்டன என்று எண்ணப்படுகிறது. பழைய சோழ கட்டடங்கள். கைலாசநாதர் கோயில், பல்லவகட்டடம். குழம்பேஸ்வரர் கோயில், இரட்டைத்தளீஸ்வரர் கோயில்.

**உத்திரேச்சுரம்**—சேடதாசையர் எனும் சிவபக்தர் சம ணர்களேவிய குடத்திலிருந்த பாம்பை பரமசிவத்தின் அனுக்கிரகத்தால் சிவலிங்கமாக்கிய சிவஸ்தலம்.

**உத்தரமாயூரம்**—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா, மாயவரம் ஸ்டேஷனுக்கு வடக்கிலுள்ளது. சிவால யம். ஸ்வாமி - கைகாட்டும் வள்ளல், தட்சிணமூர்த்தி சொரூபம்.

**உடையூர்**—உதயபுரி. வட இந்தியா பில்ஸாவுக்கு அருகிலுள்ளது. இங்குள்ள சிவாலயங்கள் (1) மஹாதேவர் கோயில், அமிரத் குகையில் வெட்டப்பட்டிருக்கிறது. (2) காசி விஸ்வநாதர் கோயில்-ஆரியசில்பம். பாநீலகண்டேஸ்வரர் கோயில். மிகவும் அழகிய ஆரிய சில்ப மமைந்தது.

**உதயகிரி**—சென்னை ராஜதானி, நெல்லூர் ஜில்லா, கிரீசர், உமாதேவி; வைப்புஸ்தலம்.

**உதயகிரி**—வட இந்தியா குவாலியர் சமஸ்தானம். சிவாலயம் உதயாதித்ய பிரமரனல் 1080-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. இங்கு குவாலியர் சமஸ்தானத்திலுள்ள சிவாலயங்கள்.(1)சிஜௌரா-அருநாடேஷ்வர் மகாதேவ் ஆலயம் (2) கோடேஷ்வர் மஹாதேவ் ஆலயம் (3) பரோலி-மஹாதேவர் கோயில்; ஆரிய சில்பம்; தூலேகான போரெஷ்வர் மஹாதேவர் கோயில் (4) நார்வரர் சௌடா மஹாதேவர் கோயில் (6) காட்வாயா மஹாதேவர் கோயில் ஆரிய சில்பம் (7) ஏகலிங்கர் கோயில் உதயபுரியிலிருந்து 12 மயில் வடக்கு; சிவாலயம். ஸ்வாமி ஏகலிங்கர் அல்லது ஈஸ்வர் சௌமுகி (நான்கு முகங்களுடைய லிங்கம்) இது மஹாராணுக்களுடைய குலதெய்வம்; இங்கு லிங்கத்தின் எதிரிலுள்ள நந்தி பித்தளையாலாயது. இங்குள்ள ஏரி மிகவும் அழகியது. கரையோரங்களில் பல சிறு சிவாலயங்கள் உண்டு. பம்பாய் பரோடா—சென்டரல் ரெயில்வே ஸ்டேஷன்; ஆலயம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 மயில். கோயில் ஆரிய சில்பம்.

**உப்பூர்**—சென்னை ராஜதானி, ராமநாதபுரம் ஜில்லா, சிவாலயம். இங்கு கணபதி பூசை விசேஷம்.

**உதயம்பேரூர்**—திருவாங்கூர் ராஜ்யம். சிவாலயம்.

**உப்பினங்குடி**—சென்னை ராஜதானி, மைசூர் ராஜ்யம். சிவாலயம்; சஹஸ்ரலிங்கேஸ்வரர் கோயில்.

**உரவகோண்டா**—குத்திதாலூகா அநந்தபூர் ஜில்லா, சென்னை ராஜதானி, மல்லிகார்ஜுனஸ்வாமி கோயில்.

**உலவக்கோடு**—பாலக்காடு பிரிவு சென்னை ராஜதானி, ரெயில்வே ஸ்டேஷன். இங்கு 2 சிவாலயங்கள் உண்டு.

**உள்ளால்**—மேற்கு இந்தியா; மங்களூருக்கு 2 மயில். தென் கன்னட ஜில்லா, சிவாலயம், ஸ்வாமி-சோமநாதர்,

இங்குள்ள சில்பங்கள் இதாலி தேசத்திய சில்பங்களைப் போன்றவை என்று சொல்லப்படுகிறது.

**உளுந்தூர் பேட்**—மாஷாபுரம் எனவும் வழக்கப்படு கிறது. தென் இந்தியா ; தென் ஆற்காடு ஜில்லா; சிவாலயம். ஸ்வாமி-மஹேஸ்வரர்; தேவி-லோகநாயகி. தீர்த்தம் ஞான போத புஷ்கரிணி.

**உறையூர்**—சென்னை ராஜதானி; திருச்சிராப்பள்ளியின் ஓர்பாகமாகிய பண்டமங்கலம் அக்கிரஹாரத்தில் சிவாலயம். ஸ்வாமி-ஸ்ரீ விஸ்வநாதஸ்வாமி. இவ்வூருக்கு உரகபுரம் என்பது பழய பெயர்; மூகீஸ்வரம் என்றும் பெயர். இங்கு **பஞ்சவர்ணேஸ்வரர் கோயில்** உண்டு. ஸ்வாமி-பஞ்சவர்ணேஸ் வரர்; தேவி-பார்வதி. பிரம்மாவுக்கு 5 வர்ணங்களுடன் தோற்றிய லிங்கம் என்பது ஐதிகம். பாதாள லோகத்தி லிருந்து 5 லிங்கங்களை நாகராஜன் எடுத்துக்கொண்டு வந்த போது இங்கு வந்தவுடன் அவைகள் ஒன்ருய்ச் சேர்ந்து ஒரு லிங்கமானதாக ஐதீகம். இங்கு பல கல்வெட்டுகள் உள.

**உஜ்ஜெயின்**—ஜி. ஐ. பி. ரெயில் ஸ்டேஷன், வட இந் தியா. இதற்கு சிவபுரி என்றும், அவந்திகை யென்றும், உஞ்சேனைமாகாளம் என்றும் பெயர்களுண்டு. இங் குள்ள கோயில்கள் ஆரியசில்ப மமைந்தவை. **மாகாளேஸ் வரர்** கோயில்; 12 ஜோதிலிங்கங்களில் ஒன்று; சுயம்புலிங் கம்; கோடி தீர்த்தம். (2) **நாகசண்டேஸ்வரர் கோயில்** (3) **மங்க ளேஸ்வரர்** கோயில் (4) **கோகேஷ்வரர்** மஹாதேவர் கோயில். (5) **ஆடகேஸ்வரர்** கோயில் (6) **நாகேஸ்வரர்** கோயில்.

**ஊஞ்சலூர்**—சென்னை ராஜதானி, ஈரோட் தாலூகா, கோயமுத்தூர் ஜில்லா. பழய சிவாலயம். கல் வெட்டுகள் உள.

**ஊடியூர்**—தாராபுரம் தாலூகா, கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி. இங்குள்ள குன்றுகள் மீது இரண்டு சிவாலயங்கள் இருக்கின்றன.

**ஊர்க்காடு**—சென்னை ராஜதானி, திருநெல்வேலி ஜில்லா, இதற்கு கோஷ்டீஸ்வரம் என்றும் பெயர். சிவா லயம். ஸ்வாமி-கோஷ்டீஸ்வரர் ; தேவி - கொடி யிடை நாயகி; தாம்பிரபர்ணி தீர்த்தம். அகஸ்தியர் பூசித்தது. வைப்புஸ்தலம்.

**ஊற்றத்தூர்**—லால்குடி தாலூகா, திருச்சிராப்பள்ளி ஜில்லா, சென்னை ராஜதானி. பிட்சாண்டார் கோயிலிலிருந்து 19 மயில். சிவாலயம். ஸ்வாமி - சுத்த ரத்தின ஈஸ்வரர்; தேவி-அகிலாண்டேஸ்வரி. இவ்வூருக்கு பில்வ வனக்ஷேத்திரம் என்றும் பெயர். தீர்த்தங்கள் தேவக தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், அகில தீர்த்தம், வேலவடி தீர்த்தம், நந்தி ஆறு. சுயம்பு லிங்கம். பிரம்மோற்சவம் வைகாசி மாசம்; மாசி மாசம் சூரியபூஜை.

**எச்சிகனஹல்லி**—மைசூர் ராஜ்யம், நஞ்சங்கோட்டுக்கு அருகிலுள்ளது. சோமேஸ்வரர் கோயில்; கிலமாயிருக்கிறது.

**எட்டையாபுரம்**—கோயில்பட்டி தாலூகா, திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி. சிவாலயம். ஸ்வாமி-எட்டேஸ்வரர்; கோயில் சுமார் 300 வருடங்களுக்குமுன்பு கட்டப்பட்டிருக்கிறதென மதிக்கப்படுகிறது.

**எடத்தூர்**—மைசூர் ராஜ்யம். சிவாலயம். ஸ்வாமி-சோமேஸ்வரர்; தேவி-சோமசுந்தரி. காவிரியின் கரையிலுள்ளது. மாசி மாதத்தில் சூரியபூஜை.

**எதிர்கோள்பாடி—(திரு)மேலைத் திருமணம் சேரி** எனவும் வழங்கப்படுகிறது. வேள்விக்குடிக்கு 2 மயில் வடக்கு. குற்றாலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து $4\frac{1}{2}$ மயில். சென்னை ராஜதானி. ஸ்வாமி-ஐராவதேஸ்வரர்; தேவி-மலர்குழனன்மாது. தீர்த்தம், சிவகங்கை; ஐராவதம் பூசித்ததலம். வேள்விக்குடியில் மணம் செய்து கொண்ட ராஜகுமாரனை, சிவபெருமான் அவனது அம்மான் வேடத்தில், எதிர்கொண்டு அழைத்துக்கொண்டு போனபடியால் எதிர்கொள்பாடி எனப் பெயர் பெற்றது. சுந்தரர் பாடல்பெற்ற ஸ்தலம்.

**எர்ரபல்லா**—கடப்பை ஜில்லா, சென்னை ராஜதானி. சிவாலயம். குகைக்கோயில்; பஞ்சலிங்க கோணையிலுள்ளது. **ஐந்து சிவாலயங்கள்** உள. இங்கு உள்ளே செல்ல ஒரு சிறு வழியால் நகர்ந்து செல்லவேண்டும். கார்த்திகை சோமவாரம் விசேஷம். இதற்கு அருகாமையில் **குண்டல மல்லிகார்ஜுனஸ்வாமி** கோயில் உளது. தீர்த்தம் எதிரிலுள்ள மலை வீழருவி; ஸ்நானம் விசேஷம்.

**எரணகுளம்**-கொச்சி சமஸ்தானத்திலுள்ளது. சிவாலயம், மரச்சிற்பங்க ளமைந்தது; சிறந்த வேலைப்பாடுடையது.

**எருக்கத்தம்புலியூர்**—(திரு)விருத்தாசலத்திற்கு 7 மயில். சென்னை ராஜதானி, இதற்கு பழய பெயர் ராஜேந்திரப் பட்டணம். திருநீலகண்டப் பெரும்பாணநாயனர் சரித்திர சம்பந்தமானது. ஸ்வாமி-நீலகண்டேஸ்வரர், தேவி-நீல மலர்க்கண்ணியம்மை. வெள்ளெருக்கு விருட்சம்; நீலோற்பல தீர்த்தம். கோயிலில் வெள்ளெருக்கஞ் செடியின்கீழ் ஸ்வாமி தோன்றி யிருக்கிறார். திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது.

**எல்நூர்**—சென்னை ராஜதானி ஸ்வாமி-மார்க்கண்டேஸ்வரர்; தேவி-மரகதாம்பாள். மார்க்கண்டேயர் பூசித்த ஸ்தலம்.

**எல்லூர்**—சென்னை ராஜதானி, கிருஷ்ணா ஜில்லா, சிவாலயம்.

**எல்லோரா**—நிஜாம் ராஜ்யத்திலுள்ளது. அவுரங்கபாத் ரெயில் ஸ்டேஷனிலிருந்து 13 மயில்; தௌலத் பாத்தி லிருந்து 7 மயில்; ரோஜா நகரத்திற்கு 10 மயில். இங்கு போக தௌலத்பாத் ஸ்டேஷனிலிருந்து வண்டிகள் கிடைக்கும். இங்கு பல பௌத்த சமணருடைய கோயில்கள் உண்டு. சிவாலயங்களும் உண்டு. அவைகளில் முக்கியமானவை. **கைலாசர் கோயில்** என்பதாம். இது மிகவும் ஆச்சர்யகரமானது. இதைப் பார்க்க பல கண்டங்களிலிருந்து ஜனங்கள் வருகின்றனர். ஒரே மலையை, 106 அடி ஆழத்திற்குக் குடைந்து கோயிலாக வெட்டப்பட்டது. கோயில் 139 அடி அகலம், 247 அடி நிகளம்; நடுவிலுள்ள விமானம் 96 அடி உயரம். இக்கோயில் முதல்கிருஷ்ணன் எனும் ராஷ்டிர கூட அரசனல் கட்டப்பட்டது (757—783) இங்கு கர்ப்பக்கிரஹத்தில் பெரிய லிங்கம் இருக்கிறது. எதிரில் நந்திக்கு பதினறுகால் மண்டபம் ஒன்றுண்டு. மண்டபத்தின் இரு பக்கத்திலும் 49 அடி உயரமுள்ள இரண்டு துவஜஸ்தம்பங்களிருக்கின்றன. (தீபஸ்தம்பங்கள்?) இவைகளின் உச்சியில் திரிசூலங்கள் இருக்கின்றன. சுற்றுப் பிராகாரத்தில் சப்த மாதருக்கள் முதலியோரின் சில்பங்களிருக்கின்றன. பிராகாரத்தில் இரண்டு பெரிய கல்லாலாகிய யானைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன. பிராகாரத்தைச்சுற்றிலும் சிறு மண்டபங்கள் உண்டு. பிராகாரத்தில் மேல்மாடியொன்றுண்டு. நடுவிமானத்தைச் சுற்றிலும் 5 சிறு கோயில்கள்

இருக்கின்றன. கர்ப்பக்கிரஹம் யானைகளால் தாங்கப் பட்டதுபோல் குடையப்பட்டிருக்கிறது. பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் கங்கை, யமுனை சரஸ்வதி நதிகளின் கோயிலிருக்கிறது. இங்கு ஒருபுறமுள்ள ராவண அனுக் கிரஹ மூர்த்தி மிகவும் அழகியது. இவ்வளவும் ஒரே மலைப் பாறையில் செதுக்கப்பட்டதாம்! கோயில் மேற்கு பார்த் தது. சிவராத்திரியில் மாத்திரம் பூசையுண்டு; மற்ற நாட்க ளில் பூசை கிடையாது. இங்குள்ள கடிசமநடனமாடும் நடராஜ மூர்த்தியும், லலிதா நடனமூர்த்தியும் மிகவும் அழ கியவை. இங்குள்ள தசாவதார குகை, ராமேஸ்வர குகை மூத லியவைகள் சிவாலயங்களேயாம்; இவைகளில் பரமசிவத் தின் அழகிய உருவங்களிருக்கின்றன. தூமார்லீன குகையும் சிவாலயமாம். இதன் வடபுறம் சண்டேஸ்வரர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. தசாவவதாரக் குகையில் முக்கிய உருவம் கைலாசமூர்த்தி. அருகிலுள்ள எல்லோரா கிராமத் தில் ஒரு சத்திரமுண்டு. அன்றியும் இக்கிராமத்தில் 18 ஆம் நூற்றுண்டில் அஹல்யாபாய் கட்டிய சிவாலயம் ஒன்று உளது. அழகிய சில்பமமைந்த கோபுரமுடையது.

எழுமாந்தூர்—கோயமுத்தூர் ஜில்லா, சென்னைராஜ தானி, ஒரு சிறு குன்றின்மீது சிவாலய மிருக்கிறது.

எளந்தூர்—மைசூர் ராஜ்யத்தில் பிலிகிரிரங்கள் மலைகளி லுள்ளது, ஏலாந்தூர் தாலுகாவில். இளைய + இந்தூர் = இளைய சந்திரனூர் எளந்தூர் என்றுயது. சிவாலயம். ஸ்வாமி கௌளீஸ்வரர்-புதியகோயில். சளுக்கியய சில்பம். சுமார் 1450-ஆம் ஆண்டில் பாடிநாட்டு அரசனுகிய சிங்க தேவர் என்பவரால் கட்டப்பட்டது.

எள்வனசூர்—தென் ஆற்காடு ஜில்லா சென்னை ராஜ தானி, திருக்கோயிலூர் தாலூகா; பழைய பெயர் சோழ கேரள சதுர்வேதி மங்கலம் அல்லது இறையனுகியூர் சிவா லயம். ஸ்வாமி கிராமர்த்தனதேஸ்வரர். இங்கு 1135-வருடத் திய கல்வெட்டில் மாணிக்கவாசகருடைய திருச்சாழல் ஓது வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

எறும்பியூர் திருவெறும்பூர்—தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன்; திருச்சிராப்பள்ளிக்கு $6\frac{1}{2}$-மயில் கிழக்கு. தேவர் கள் எறும்பு உருவில் பரமசிவத்தை பூசித்த க்ஷேத்ரம். ஸ்வாமி-எறும்பீஸ்வரர்; தேவி நறுங்குழல் நாயகி; பரம

தீர்த்தம்; சந்திர புஷ்கரணி, குமரி புஷ்கரணி, பிபீலியா தீர்த்தம்; அற்புத தீர்த்தம்; கோயில் சிறு குன்றில் இருக்கிறது. இதற்கு பழைய பெயர் மணிகூட அசலம். இங்குள்ள லிங்கம் வடக்கு பக்கம் சாய்ந்திருக்கிறது. ஆதியில் புற்றாயிருந்ததாக ஐதிகம். லிங்கத்திற்கு எண்ணெய் தவிர வேறு அபிஷேகமில்லை. கரன் பூசித்த ஸ்தலமென்பது புராணம். கோயில் துவார பாலகர்கள் சில்பம் பார்க்கத்தத்தக்கது. கோயிலில் சுரங்கம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. பெரிய மண்டபம் கிலமா யிருக்கிறது. திருநாவுக்கரசு ஸ்வாமிகள் பாடல் பெற்றது.

**எனமடலா**—குண்டூர் தாலூகா, மேற்படி ஜில்லா, சென்னை ராஜதானி; வீரபத்ரேஸ்வரர் கோயில்.

**ஏககிராமம்**—வட இந்தியா சிவாலயம். சுயம்புலிங்கம். ஸ்வாமி க்ருத்திவாச ஈஸ்வரர். கோயில் வட இந்திய ஆரிய சில்பம்.

**ஏடகம்—(திரு)** மதுரை ஜில்லா, சென்னை ராஜதானி, சோழவந்தான் ஸ்டேஷனுக்கு $2\frac{1}{2}$-மயில் தென்மேற்கிலுள்ளது. மாணிக்கவாசகர் குலச்சிறை நாயனார் சரித்திரங்களில் சம்பந்தப்பட்டது. சமணர்களுடன் வாது புரிந்து வென்ற திருஞான சம்பந்தர் இட்ட திரு ஏடு, வைகையை எதிர்த்துச் சென்று இங்கு தங்கிய ஸ்தலம்; எனவே ஏடகம் எனப் பெயர் பெற்றது. ஸ்வாமி-ஏடகநாதேஸ்வரர்; தேவி சுகந்த குந்தளாம்பாள் ஏலவார்குழலி, தீர்த்தம் வைகைநதி.

**ஏத்துமானூர்**—திருவாங்கூர் சமஸ்தானம். ஆலவாயருகில் உள்ளது. சிவாலயம் இப்பக்கத்தில் மிகவும் பிரசித்தி பெற்றது. ஸ்வாமி-பரமேஸ்வரர்; தேவி பார்வதி.

**ஏமர்பேரூர்**—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா, சிவாலயம். ஸவாமி-நேயப்பேரூர் நாதர்; தேவி பார்வதி. நமிநந்தியடிகள் சம்பந்தமான ஸ்தலம். வைப்புஸ்தலம்.

**ஏர்ப்பாடு**—வட ஆற்காடு ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம் காளஹஸ்திக்கு 9-மயில். ஸ்வாமி ஊற்றேஸ்வரர். இங்கு வற்றாத ஒரு ஊற்றுளது.

**ஏவூர்**—திருவாங்கூர் ராஜ்யம், சிவாலயம்.

ஏமூர்—சென்னை ராஜதானி, சேலம் ஜில்லா, நாமக் கல்லுக்கு வடபுறம் உள்ள சிவாலயம், தேவார வைப்புஸ்தலம்.

**ஐயங்கார்குளம்**—காஞ்சீபுரம் தாலூகா, செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜதானி, கைலாசநாத ஸ்வாமி கோயில்.

**ஐயாறு**—(திருவையாறு) தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஸ்டேஷனுக்கு 7 மயில் வடக்கிலுள்ள பிரபலக்ஷேத்திரம். ஐ—ஆறு = ஐந்து நதிகள். தஞ்சாவூரிலிருந்து இங்கு போகும்வழியில் வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி எனும் ஐந்து ஆறுகள் உள்ளன. இதனுல் இந்த க்ஷேத்திரத்திற்கு இப்பெயர் வந்திருக்கலாம். ஸ்தல புராணத்தில், ஐயாறு என்பதற்கு, கங்கைநீர், உமை கொங்கைநீர், கமண்டலநீர் கொண்டல்நீர், நந்திவாய் நுரைநீர், என்று அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. ஜகதீசஜையர் சூரிய புஷ்கரிணி, கங்கை, அமிர்த தீர்த்தம், பாலாறு, நந்தி தீர்த்தம், இவ் வைந்தும் காவேரியின் கீழ்பாகம் பாய்ந்து அதனுடன் புஷ்யமண்டபத்தின் மேற்கில் சேர்வதாக ஐதிகம், என்கிறார். கோயில் 871-ஆம் ஆண்டில் ஆதித்யன் எனும் அரசனுல் கட்டப்பட்டதென்பர். பெரும் புண்ணிய க்ஷேத்திரம். காசிக்கு வீசம் அதிகம் திருவையாறு என்பது பழமொழி. சமுத்திர ராஜன் இங்கு காவிரியை வணங்கிய க்ஷேத்திரம். தர்ம தேவதை பூசித்து நந்தி தேவராகி, ஸ்வாமியைத் தாங்கும் அழியாப் பதம்பெற்ற தலம். திருநாவுக்கரசு நாயனருக்கு ஸ்வாமி உமையொடு கைலாச தர்சினம் கொடுத்த திவ்ய ஸ்தலம். இந்த உற்சவம் இங்கு ஆடி மாசம் அமாவாசையன்று நடைபெறுகிறது. சுந்தரமூர்த்தி நாயனருக்கும், சேரமான் பெருமான் நாயனருக்கும், காவிரி விலகிவிட்ட ஸ்தலம். கோரதவசி என்பவர் பூசித்து பாபம் நீங்கிய க்ஷேத்திரம். சப்த ஸ்தலங்களில் முதன்மையானது. மூவர் பாடல் பெற்றது. ஸ்வாமி-செம்பொற் ஜோதீஸ்வரர், பஞ்சநதேஸ்வரர். தேவி தர்ம சம்வர்த்தினி. தீர்த்தம் காவிரி நதி; இதில் ஆடி மாசம் 18-ஆம் பெருக்கு விசேஷம். கோயில் பெரிய கோயில். ஸ்வாமி கோயிலுக்கு வெளியில் அம்மன் கோயில் பிறகு கட்டப்பட்டதாக சிலர் எண்ணுகின்றனர். கர்ப்பக்கிரகத்தில் லிங்கத்தின் பின்பாகம் சோமாஸ்கந்த மூர்த்தி செதுக்கப்பட்டிருக்கிறது. இந்த பாகம் பல்லவ அரசர்கள்

காலத்தியதென்று தாப்றெயில் துரை எண்ணுகிருர். சிவ லிங்கம் பட்டைகள் தீர்ந்த வடிவமுடையது. தற்காலம் சுப்பிரமணியஸ்வாமி யிருக்கும் கோயில் பூர்வத்தில் விஷ்ணு ஆலயமாக இருந்ததாக சிலர் எண்ணுகின்றனர். இங்கு வைஷ்ணவ சின்னங்கள் இருக்கின்றன. இங்கு வட கைலாசம் தென் கைலாசம் என்று இரண்டு கோயில்கள் உண்டு. வட கைலாசம் கோயிலில் பல கல் வெட்டுகள் இருக்கின்றன. தென் கைலாசக் கோலியில் சுமார் 50 கருப்பு நிறமமைந்த அழகிய தூண்கள் உள. இவை சளுக்கிய சில்பத்தைச் சார்ந்தவைகளாம். புராணக் கதையின்படி ஹஸ்தினபுரத்து சுரத மகாராஜனல் உத்தர கைலாசமும் தட்சிண கைலாசமும் கட்டப்பட்டனவாம். உத்தர கைலாசக் கோயில் ராஜராஜன் மனைவியாகிய லோக மஹாதேவியால் புதுப்பிக்கப்பட்டது. இதற்கு உமா மஹா தேவீசம் என்றும் பெயர். சில நூற்றாண்டு களுக்குமுன் தஞ்சையையாண்ட மஹாராஷ்டிர அரசர் ஒருவர் இங்கிருந்த விஷ்ணு ஆலயத்தை அகற்றி விஷ்ணு விக்ரஹத்தை காவிரிக்கு அப்புறமுள்ள கலியாணபுரத்தில் வைத்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. தற்காலம் தேவி கோயிலாயிருப்பது முன்பு விஷ்ணு கோயிலாக இருந்தாகச் சொல்லப்படுகிறது. அக்காலம் தற்போது பழனியாண்ட வர் சந்நிதியா யிருப்பது அம்மன் கோயிலாயிருந்திருக்க லாம் என்று எண்ணப்படுகிறது. நாயக்கர்கள் மந்திரியாகிய கோவிந்த தீட்சதரும், பச்சையப்ப முதலியாரும் கோயிலின் சில பாகங்களைப் புதுப்பித்திருக்கின்றனர். வெங்கி அரசனு கிய விமலாதித்யன் இக்கோயிலுக்கு தர்ம கைங்கரியம் செய்திருக்கிருன். (1013-14) இக் கோயிலில் அழகிய பிரம் மாவின் சிலை ஒன்றிருக்கிறது. இங்குள்ள க்ஷேத்திர பாலக தேவதைக்கு ஆட்கொண்டார் என்று பெயர். இவர் யம னிடமிருந்து ஒரு பிள்ளையை மீட்டதாக ஐதிகம்; அச்சம யம் திருவையாற்றில் தன் கோயிலுக்கெதிரில் குங்கிலிய தூபம் எரிகிற அளவில், யமன் ஒருவரையும் பாதிக்க லாகாது, என்று கட்டளையிட்டனராம். ஆட்கொண்டார் சிலை யமனைக் காலின்கீழ் மிதித்தபடியிருக்கிறது. காசிக்கு ஒரு வர்த்தகன் தகப்பனுருடைய அஸ்தியை எடுத்துக் கொண்டு போனபோது, இந்த க்ஷேத்திரத்திற்கு வந்த சமயம், அது புஷபங்களாக மாறினதாகவும், லிங்கமாக

மாறினதாகவும் சொல்லப்படுகிறது. ஆகையால் இங்கு அநேகர் தங்கள் அந்திய காலத்தைக் கழிக்கின்றனர். ஸ்வாமி கோயிலில் வெளிப்பிராகாரத்தில் பிரதி தொனி யுண்டு; அது ஆறு ஏழு முறை பிரதிபலிக்கிறது. பிரம் மோற்சவம் சித்திரைமாசம். இதன் கடைசி தினத்தில் சப்தஸ்தான உற்சவம் மிகவும் விசேஷம். திருமழபாடியில் நந்திகேஸ்வரருக்குத் திருமணம் முடித்து பஞ்சநதேஸ்வரர் அவரை ஊர் கோலமாக, ஏழு ஸ்தலங்களுக்கு அழைத்துச் செல்கிறார். அவை, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை. திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, தில்லை ஸ்தானம், திருவையாறும்; மற்ற ஆறு ஸ்தலங்கள் திருவையாற்றிற்கு 3 மயில் சுற்றளவில் உள்ளன. பெரிய கோயிலைப் பிரதட்சிணம் வரும்பொழுது முற்றிலும் சுற்றிவருவதில்லை. இதற்குக் காரணம் விசித மாகத் தெரியவில்லை. காவிரிக்கரையில் ஸ்வாமி தீர்த்தம் கொடுக்கும் கட்டம் மிகவும் அழகியது. ஸ்வாமி சுயம்பு லிங்கம். நைமிசரிஷிக்கு, ஸ்வாமி இங்கு ஒரு கோயில் கட் டும்படியாக உத்திரவிட, அவர் அதற்குப் பொன் இல்லை யென வருத்தப்பட, நந்திகேஸ்வரர் பாதச்சுவடுள்ள இடங் களின்கீழ் பொருள் கிடைக்குமென உத்தரவானதாக ஐதிகம். நந்திதேவரது குளம்பின் சுவடுகள் கோயிலின் மூன்றும் பிராகாரத்தில் இன்னும் காணலாம். கோயில் மிகவும் பூர்வீகமானது. 985-ம் ஆண்டில் கட்டப் பட்டது என்று சிலர் கூறுவர். கிழக்கு கோபுரம் 7-நிலை களை யுடையது.

**ஐயம்பேட்டை**—*தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜ தானி, சிவாலயம்.*

**ஒத்தேபாலம்**—*மலபார் ஜில்லா, சென்னை ராஜதானி, திரிக்கற்கோட் கோயில். இங்குள்ள ஸ்ரீ கோயில் அல்லது மூலஸ்தானத்தில், பரமசிவத்துடன் விஷ்ணுவும் ஆராதிக் கப்படுகிறது.*

**ஒரிஸ்ஸா** *பிரிவு*—**இங்கு பாவுட்** என்னுமிடத்தில் **3 சிவா லயங்களும், கிச்சிங்** என்னுமிடத்தில் **ஓர் சிவாலயமுமுண்டு.** *கிச்சிங்கிலுள்ள சிவாலயம் மான்சிங் காலத்தில் மராமத்து செய்யப்பட்டது.*

ஒற்றியூர்—திருவொற்றியூர். கிழக்கு இந்தியா ரெயில் ஸ்டேஷன் ; சென்னபட்டணத்திற்கு 5 மயில் வடக்கிலுள் ளது. ஒற்றிவைக்கப்பட்ட ஊர் ஒற்றியூர்; அல்லது கடல் ஒற்றிப் போனபடியால் ஒற்றியூர் ஆயதென்பர்; 'கடல் ஒற்றியூர்' என்பதைக் காண்க. இதற்கு ஆதிபுரி என்றும் பெயர். மூவர் பாடல்பெற்ற க்ஷேத்திரம். மாந்தாதா, தொண்டமான், ரோமசர், நந்திதேவர், பூசித்த ஸ்தலம். பட்டினத்துப் பிள்ளையார் அடைக்கலமான தலம். கலிய நாயனர் திருவிளக்கு தொண்டுசெய்த இடம். சுந்தரமூர்த்தி நாயனர் சங்கிலிநாய்ச்சியாரை மணந்த இடம். அவர் மகிழ மரத்தடியில் பிரமாணம் செய்து கொடுத்ததை முன்னிட்டு, ஸ்வாமிக்கு மாசிமாசம் நடக்கும் பிரமோற்சவத்தில் மகிழடி சேர்வை எனும் பிரபல உற்சவம் நடக்கிறது. ஸ்வாமி ஆதிபுரீஸ்வரர், படம்பக்கநாதர், மாணிக்க தியாகர்; தேவி வடிவாம்பிகை யம்மை, திரிபுர சுந்தரி. ஸ்தல விருட்சம் மகிழமரம். பிரம்ம தீர்த்தம், அலைவாய் தீர்த்தம். கோயிலின் கர்ப்பக்கிரஹ விமானம் மிகவும் பழமையானது. 1012-1042-இல் ஆண்ட ராசேந்திர சோழனல் கட்டப்பட் டது ; அதற்கு முன்பு செங்கற்கட்டிடமா யிருந்திருக்க வேண்டும்; பழய சோழ கட்டிடம் கஜப்பிருஷ்ட ஆகிருதி; அவ்வரசன் காலத்தில் சதுரானன் உத்திரவின்படி ரவி எனும் சில்பியினல் கட்டப்பட்டதாக ஒரு கல்வெட்டு கூறு கிறது. லிங்கம் புத்துருவாயது. மேலே கவச மிடப்பட் டிருக்கிறது. அற்பிசிமாசம் கவசத்தை மூன்று தினம் களைகின்றனர்; அச்சமயம் பந்தனம் செய்யப்படுகிறது. தெற்குப் பிராகாரத்தில் கௌளீசர் கோயில் இருக்கிறது. இதுதான் பழய காலத்தில் படம்பக்கதேவர் ஆலயம் என அழைக்கப்பட்டதாம். இது கட்டப்பட்டது வீர ராஜேந்திர தேவர் காலம் (1067-1068) இங்கிருக் கும்சிலை யோக தட்சிணமூர்த்தி உருவம் என ; கோபிநாத் ராவ் எண்ணுகிறர் ; சிலர் லகுலீசர் என்று நினைக்கிறர்கள். இக்கோயில் பசுபதி யென்பவரால் கட்டப்பட்டதாக கல் வெட்டு கூறுகிறது. அம்மன் சந்நிதி பிற்காலத்தில் கட் டப்பட்டது. இதற்குப் பூஜைசெய்பவர் மலையாளப் பிராம் மணர். இங்கு ராஜேந்திர சோழன் மடம், குலோத்துங்க சோழன் மடம், முதலிய பல மடங்கள் பூர்வீகத்தில் இருந்த தாக அறிகிறோம். பண்ணைகொண்ட சோழன் மண்டபம்,

ராஜராஜன் மண்டபம், ராஜேந்திரசோழன் மண்டபம் முதலிய பலமண்டபங்கள் இருந்ததாக அறிகிறோம். கர்ப்பக்கிரஹத்திற்கு தெற்கில் தியாகராஜர் சந்நிதி இருக்கிறது. இது புதிய கட்டிடம். இங்கு வட்டபலிநாய்ச்சியார் எனும் துர்க்கை சந்நிதியுண்டு. இது மிகவும் பூர்வீக சந்நிதியாய் இருக்க வேண்டும். பூமியின் கீழ் மட்டத்தி லிருக்கிறது. பிறகு கோயில் கர்ப்பக்கிரஹம் கட்டியபொழுது இதைச் சேர்த்துக் கட்டியிருக்கிறார்கள். சித்திரை மாசம் இத் துர்க்கைக்கு 18-நாட்கள் உற்சவம். இங்கு ஆடு, எருமை முதலிய பலி கொடுக்கப்படுகின்றன. இந்த உற்சவ முடிவில் பெரிய கோயிலுக்கு சம்புரோட்சணம் செய்யப்படுகிறது. ஆதிசங்கராசாரியார் வட்டபலி நாய்ச்சியாரின் உக்கிரத்தை யடக்கி, அச் சக்தியைக் கிணற்றில் கிடத்தி அதன்பேரில் ஒரு பெரிய கற்பாறையைக் கவிழ்த்ததாக ஐதிகம்; இப்பாறையை இன்னும் காணலாம். கோயிலுக்கு வெளியில் கிழக்கில் சங்கராசாரியார் மடம் இருக்கிறது. கிழக்கு கோபுரத்திற்கு நேராக இருக்கும் சந்நிதி ஆதிபுரீஸ்வரர் சந்நிதியாம், இக்கோயிலுக்கு பழய கோபுரம் இல்லை. சென்ற நூற்றாண்டின் கடைசியில் எல்லப்ப செட்டியார் என்பவரால் தற்கால கோபுரம் கட்டப்பட்டது. இக் கோயிலில் 200-க்கு மேற்பட்ட கல்வெட்டுகள் உள. அவைகளினின்றும் அடியிற் கண்ட சங்கதிகளை அறிகிறோம். அவற்றுள் மிகவும் பூர்வீகமானது. 908-947-ல் ஆண்ட முதல் பராந்தகனுடையது. இங்கு வியாகர்ணதான வியாக்கியான மண்டபம் என்று ஒன்றிருந்ததாம். இதனால் ஸ்வாமிக்கு வியாகர்ணதானப் பெருமான் என்று ஒரு பெயர் வழங்கலாயிற்று. குலோத்துங்க சோழன் இங்கு ஆனி உற்சவத்தை தரிசித்ததாகவும், ராஜராஜன் திரு மண்டபத்தில் தங்கியதாகவும் தெரிகிறது. இவ்வூர் ஸ்வாமிக்கு கரணைவிடங்கர் என்று பெயர் இருந்ததாம். இங்கு சூரியனுக்கு ஒரு சந்நிதி யிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இங்குள்ள பிள்ளையாருக்கு 'அனுக்கு பிள்ளையார்' என்று பெயராம். (அனுக்கை பிள்ளையாரா யிருக்கலாம்) வாக்குவாதம் நடத்த 'வக்காணிக்கும் மண்டபம்' என்று ஒன்று இருந்ததாகத் தெரிகிறது. பூர்வகாலத்தில் கோவில் வேலைக்காரர்கள் 139-பெயர் இருந்ததாக அறிகிறோம். அவர்களுள் ஒருவனுக்கு எல்லைக் காவல் என்று பெயராம்.

இக் கோயில் சோழ அரசர்கள் காலத்தில் மிகவும் பிரசித்தி பெற்றிருந்ததென்பதற்கு ஐயமில்லை. தேவதானமாக அவர்களால் பல கிராமங்கள் பெற்றிருந்தது. கர்ப்பக்கிரஹத்தின் வடக்கில் ஏகபாதமூர்த்தி (சிவபெருமான் திரிமூர்த்தி ஸ்வரூபமா யிருப்பது) பார்க்கத்தக்கது. இக் கோயிலில் அஷ்டோத்திர லிங்கம், சஹஸ்ர லிங்கம், தாரா லிங்கம் முதலியவை உள. பிரம்மோற்சவத்தில் தியாகர் உற்சவம் தான் விசேஷம்; ஐந்தாம் பவனி, ஆறும் பவனி விசேஷம். இக் கோயிலிலுள்ள கலியாண சுந்தர மூர்த்தி விக்ரஹம் மிகவும் அழகியது. இது சுமார் 1000-வருடங்களுக்கு முந்தியது என்று எண்ணுகிறார்கள். ஆதொண்டை சக்ரவர்த்தி புழல் கோட்டத்தை ஜெயித்தபோது அங்கிருந்த இரண்டு பவழத் தூண்களையும் 2 வெண்கலத் தூண்களையும் இக் கோயிலுக்குக் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. அவைகளைக் கடல் கொண்டுபோயிற்றென்கின்றனர். தற்காலம் வடமேற்கு மூலையில் சிவபக்தரான ராமசாமி பிள்ளையவர்களால் ஒரு புதிய சிவாலயம் கட்டப்பட்டிருக்கிறது. தியாகருக்கு மாணிக்க தியாகர் என்று பெயர். திலீப மகாராஜாவுக்கு நடன தர்சினம் கொடுத்த தலம். தியாகருக்கு அசையும் தியாகரெனவும் பெயர். ஸ்வாமிக்கு எழுத்தறியும் பெருமான் எனும் திருநாமமுமுண்டு. கோயிலுக்குள் நடராஜருடைய சந்நிதிக்குப் பின்புறம் மஹாவிஷ்ணுவின் சிலை யிருப்பதாகவும் அது அடைக்கப்பட்டதாயும் சொல்லப்படுகிறது. பெரிய கோயிலுக்குள் உள்ள மற்ற சிறு சிவாலயங்கள்—**அரிஞ்ஜீஸ்வரமுடையார்** கோயில்; **கம்பீஸ்வர முடையார்** கோயில்; **விடேல்விடுகீஸ்வரர்** கோயில். இங்கு சந்நிதி வீதியில் **அகஸ்தீஸ்வரர்** கோயில் என்று மற்றொரு சிறு சிவாலயமுளது. ஸ்வாமி-அகத்தீஸ்வரர்; தேவி அகிலாண்ட ஈஸ்வரி. இக்கோயில் வடக்கு பார்த்தது. பெரிய கோயிலில் இரண்டு சுரங்க அறைகள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது; அவைகள் தற்காலம் மூடப்பட்டிருக்கின்றனவாம். தியாகராஜர் பகற் காலத்தில் புறப்பாடாவதில்லை.

**ஒன்டிமிட்டா**—சென்னை ராஜதானி கடப்பை ஜில்லா, கடப்பைக்கு 15-மயில் சிவாலயம்.

**ஓங்கார அமரேஷ்வர்**—கோயில். வட இந்தியா பி. பி. சி. ஐ. ரெயில் ஸ்டேஷனாகிய மோரடக்காவில் இறங்கி 10-

மயில் போகவேண்டும். சிவாலயம்; ஜோதி லிங்கங்கள் 12-ல் ஒன்று. நர்மதைக் கரையில் ஒரு சிறு குன்றில் கோயிலிருக்கிறது. ஸ்வாமி-ஓங்காரேஷ்வர், ஓங்கார்ஜி; கோயில் வட இந்தியா ஆகிய சில்பம்.

**ஓங்காரபுரம்**—தென் இந்திய சிவாலயம். ஸ்வாமி சிவ ஞானேஸ்வரர்; கருட தீர்த்தம்.

**ஓடூர்**—பூனா ஜில்லா, பம்பாய் ராஜதானி, சிவாலயம். ஸ்வாமி-கபர்திகேஷ்வர்; கருட தீர்த்தம்.

**ஓடூரு**—சொராப் தாலுகா, ஷிமோகா ஜில்லா, மைசூர் ராஜ்யம். ராமேஸ்வரர் கோயில்.

**ஓத்தூர்**—(திரு) இதற்கு திருவந்திபுரம் என்றும் பெயர். செய்யாறு தாலுகா, செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜ தானி; காஞ்சீபுரத்திற்கு 17-மயில் மேற்கிலுள்ளது. சிவ பெருமான் வேதாந்தத்தை முனிவர்கட்கு உபதேசித்த தலம். திருஞான சம்பந்தமூர்த்தி ஆண்பனையை பெண் பனையாக்கிய க்ஷேத்திரம். இவ்விடம் சிலையாலாகிய பனை மரம் ஒன்றுளது. ஸ்வாமி-வேதநாதேஸ்வரர்; தேவி இள முலைநாயகி. வேத தீர்த்தம், திருஞான சம்பந்தர் பாடல் பெற்ற தலம். சூரியன் பூசித்து ஒற்றைச் சக்கரம் பெற்ற இடம். கோயிலில் பல கல்வெட்டுகள் உள. இவ்வூரில் **சிதம்பரேஸ்வரர்** கோயில் என்று மற்றொரு கோயில் உண்டு. இங்கு ஸ்வாமி பாம்பாட்டியாக வந்து சமணர்கள் ஏவிய பாம்பினை ஆட்டுவித்ததாக ஐதிகம். குமாரஸ்வாமி தரை யில் கீறி ஜலம் உண்டாக்கவல்ல வேலாயுதம் பெற்ற இடம்; விஷ்ணு பிருகு ரிஷியினால் பெற்ற சாபம் தீர்ந்த ஸ்தலம்; லட்சுமி கல்யாணி மகரிஷி சாபத்தால் பெற்ற பெண்மான் உருவம் நீங்கிய க்ஷேத்திரம்.

**ஓமலூர்**—சென்னை ராஜதானி, கொங்குநாட்டிலுள்ளது; சிவாலயம் கெட்டி முதலியார்களால் கட்டப்பட்டது.

**ஓமனூர்**—சென்னை ராஜதானி, திருநெல்வேலி ஜில்லா திருநெல்வேலிக்கு 5-மயில். சிவாலயம். இதற்கு திருமந்தி ரேஸ்வரம் என்றும் பெயர். ஸ்வாமி-அர்த்தநாரீஸ்வரர்; தேவி அர்த்தநாரீஸ்வரி.

**ஓமாம்புலியூர்**—தஞ்சாவூர் ஜில்லா, மன்னார்குடிக்கு 4-மயில் தூரம் சென்னை ராஜதானி. மண்ணிப்படிக்

க்கரைக்கு 2-மயில் வடமேற்கு. வேடன் சிவராத்ரியில் துயிலாதிருந்து முத்தி பெற்ற க்ஷேத்திரம். ஸ்வாமி-துயர் தீர்த்த நாதர்; தேவி பூங்கொடிநாயகி. சிவ தீர்த்தம், கொள்ளிடநதி தீர்த்தம். திருஞான சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது. இதன் கீழ்பக்கம் வடதளி எனும் சிவாலயம். ஒன்றுண்டு.

**ஓரகடம்**—செங்கல்பட்டு ஜில்லா, சிவாலயம். ஸ்வாமி-வடமலீஸ்வரர்.

**ஓவியமங்கலம்**—சென்னை ராஜதானி, புதுக்கோட்டை சமஸ்தானம். இதன் பழய பெயர் ஒல்லையூர் மங்கலம். சிவாலயம். ஸ்வாமி-வரகுணேஸ்வரர். பழய கல்வெட்டுகள் உடையது.

**கங்காசாகரசங்கமம்**—வட இந்தியா வங்காள ராஜதானி, சிவாலயம். ஸ்வாமி-அமரேஷ்வர் அல்லது சங்கமேஷ்வர்; சுயம்புலிங்கம். டயமண்ட ஹார்பரிலிருந்து 30-மயில் நடை.

**கங்காள்**—சஹரான்பூர் ஜில்லா, ஐக்கிய மாகாணம், வட இந்தியா; கங்கையின் மேற்குக்கரையிலுள்ளது. ஹரத் துவாரத்திற்கு 1-மயில் தெற்கு. சிவாலயம். ஸ்வாமி-தட்சேஸ்வர். பரமசிவம் தட்சனுடைய யாகத்தை அழித்த ஸ்தலம். இங்கு மலை யொன்றில் பரம சிவத்தின் திரிசூலம் இருக்கிறது.

**கங்கைகொண்ட சோழபுரம்**—சென்னை ராஜதானி, திருச்சிராப்பள்ளி ஜில்லா, உடையார் பாளையம் தாலுகா; மேற்படி ஊரிலிருந்து $6\frac{1}{2}$-மயில்; சிவாலயம் 374-அடி அகலம்; 484 அடி நிகளம். லிங்கம் பாணசுரன் பிரதிஷ்டையென்பது ஐதிகம். 30-அடி உயரமுள்ள ஒரு கற்பாறையாலாயது. இடியினல் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ராஜ ராஜன் குமாரனை ராஜேந்திர சோழனல் இக் கோயில் 1012-௵ கட்டப்பட்டது. இவனுக்கு கங்கைகொண்ட சோழன் என்றும் பெயர். இவன் இவ்வூரை ராஜதானி யாக்கி கோயிலைக் கட்டுவித்தான். கோயில் தஞ்சாவூர் பிரஹதீஸ்வரர் கோயிலைப்போன்றது. அங்கிருப்பதுபோல் இங்கும் பெரிய நந்தி யுண்டு. விமானத்தின் நிழல் கீழே விழுவதில்லை யென்பது ஐதிகம். பூர்வ காலத்தில் இக்கோயில் கோட்டையாகவும் உபயோகிக்கப்பட்டது.

கிழக்கு கோபுரம் பெரும்பாலும் கருப்புக் கல்லால் கட்டப் பட்டது. கோயில் விமானம் 174-அடி உயரம் இருக் கின்றது. 99-அடி சதுரம் கீழ்மட்டம். ஸ்வாமி- பிரஹ தீஸ்வரர். இங்குள்ள சண்டேஸ்வர அனுக்கிரஹமூர்த்தி அழகியது. இங்குள்ள கிணற்றில் பாணாசுரனுடைய வேண்டுகோளுக்கிணங்கி பரமசிவம் கங்கையை வர வழைத்ததாக ஐதிகம். கிணற்றிற்கு சிங்கக்கிணறு என்று பெயர். கோயிலிலுள்ள சரஸ்வதியின் உருவம் அழகிய சில்பம். இக்கோயிலில் 18-கல் வெட்டுகள் உள. வெளி மண்டபம் 160 × 83 அடி. இங்கு நவக்கிரஹங்களும் ஒரு தேரில் வீற்றிருப்பதுபோல் சிலை யுளது; நடுவில் சூரியன்; அருணன் சாரதி. இங்குள்ள மஹிஷாசுரமர்த்தனி சிலை பார்க்கத்தக்கது. இக் கோயில் ஒருகால் கோட்டையாக உபயோகிக்கப்பட்டது. திருவிசைப்பா பாடல் பெற்றது. கோயில் விஸ்தீரணம் 580 × 370 அடி; வாயில்கள் 60-அடி உயரம்.

**கங்கைகோண்டான்**—திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி திருநெல்வேலிக்கு 12-மயில். கைலாசபதி கோயில்; பழய சோழ கட்டிடம். ஸ்வாமி-கைலாசநாதர். கல்வெட்டுகளில் கைலாசமுடைய நாயினர் என்றிருக் கிறது; தேவி-ஆநந்தவல்லி. ஊரின் பழைய பெயர் கங்கை கொண்ட சோழ சதுர்வேதி மங்கலம் என்பதாம். 988-ம் ஆண்டிய சோழ கல்வெட்டுள்ளது; ஆகவே அதற்கு முந் தியதாம்.

**கங்கோத்ரி**—இமயமலையிலுள்ள சிவஸ்தலம்; சமுத்திர மட்டத்திற்கு 10,000-அடி உயரமானது. கோயில் சுமார் 1000-வருடங்களுக்கு முற்பட்ட தென்பர்.

**கச் பிரிவு**—பம்பாய் ராஜதானி, இங்கு அடியிற்கண்ட சிவாலயங்கள் உள. (1) **அன்ஜார் கல்யமஹாதேவர்** கோயில் புதியது; **பாரேஷ்வர்** கோயில் (2) **பாக்டா பூரேஷ்வர்** கோயில் (3) பாலன்பூர் ஜில்லா **லோடி**, லோடேஷ்வர் மஹாதேவர் கோயில் (4) **பாலன்பூர்** பாதாளேஷ்வர் மஹாதேவ் கோயில் இது சுமார் 1100-ஆம் ஆண்டில் கட்டப்பட்டதாம்.

**கச்சூர்**—திருக்கச்சூர். சென்னை ராஜதானி, செங்கல் பட்டு ஜில்லா, சிங்கப்பெருமாள் கோயில் ஸ்டேஷனுக்கு $1\frac{1}{2}$-மயில். தியாகராயரிருக்கும் பஞ்ச ஸ்தலங்களில் ஒன்று.

சுந்தரமூர்த்தி நாயனருக்கு சுவாமி பிராம்மண வடிவங் கொண்டு யாசித்து அன்னமளித்த க்ஷேத்திரம். இங்கு இரண்டு சிவாலயங்கள் உள. (1) தாழங்கோயில்; ஸ்வாமி-விருந்திட்ட ஈஸ்வரர்; தேவி-அஞ்சனுட்சியம்மை; அமிர்த தியாகர், அமிர்த தீர்த்தம்; பிரம்மோற்சவம் சித்திரை மாசம். சிறுகுன்றிலிருக்கும் கோயிலுக்கு ஆலக்கோயில் என்று பெயர். (ஆலக் கோயிலைப்பார்க்க) சுந்தரர் பாடல் பெற்றது.

**கஞ்சனூர்**—சென்னை ராஜதானி, திருவிடை மருதூருக்கு சுமார் 6-மயில் வடகிழக்கு. ஹரதத்த சிவாசாரியார் பிறந்த இடம், அவரது உருவம் கோயிலிலிருக்கிறது. இங்குள்ள நடராஜர் சிவகாமியம்மை விக்ரஹங்கள் பார்க்கத் தக்கவை. மார்க்கண்டேயர், இந்திரன், அக்னி, பிரமன் பூசித்த க்ஷேத்திரம்; ஸ்வாமி-அக்நீஸ்வரர், தேவி-கற்பக நாயகி; அக்னி தீர்த்தம்; புரச விருட்சம். பிரம்மோற்சவம் மாசி மாசம். மானக்கஞ்சார நாயனர் தன் பெண்ணின் கூந்தலை அறுத்து சிவ யோகிக்குக் கொடுத்த ஸ்தலம். திருநாவுக்கரசு பாடல் பெற்றது.

**கஞ்சி**—சென்னை ராஜதானி, கடலாடிக்கு 3-மயில் பொளூர் தாலூகா, சிவாலயம். ஸ்வாமி கரைகண்டேஸ்வரர்.

**கட்டாக் பிரிவு**—வங்காள ராஜதானி, இங்கு கீழ்கண்ட சிவாலயங்கள் உள. (1) சாடேஸ்வர் கட்டாக்குக் 12-மயில் வடகிழக்கு. சிவாலயம் 1119—1121-ஆம் ஆண்டுகளில் அநங்கபீமதேவரால் கட்டப்பட்டது. (2) ஹரிஹர்பூர் சிவாலயம், ஸ்வாமி-சோமநாதர், பழய கோயில். (3) ஜெயபுரி அகண்டேஸ்வரர் கோயில். இங்கு அக்னேஸ்வரர் கோயில் என்று மற்றொரு சிவாலயம் உண்டு. இதில் லிங்கம் தினத்திற்கு நான்குமுறை வர்ணம் மாறுவதாக ஐதிகம். திரைலோசனேஸ்வர் கோயில் என்று இன்னொரு சிவாலயமுளது. (4) மஹாவிநாயகர் மலை; இங்கு பரமசிவத்திற்கும் பார்வதிக்கும் மத்தியில் விநாயகர் இருக்கிறார். அருகாமையிலுள்ள நீர்வீழ்ச்சியின் அருகில் அஷ்டலிங்கங்கள் உள.

**கட்மாண்டு**—வட இந்தியா; நேபாளத்திலுள்ளது. சிவாலயம், ஸ்வாமி-பசுபதி; முகலிங்கம். பானுக்ஷா என்பவரால்

200-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. கோயில் செங்கல்லி ைைலும் மரத்திைைலுமாயது.

**கடக்**—நிஜாம் ராஜ்யம். **சோமேஸ்வரர்** கோயில்; சிகரத் தின் பெரும்பாகமும் கிழக்கு மண்டபமும் இடிந்துபோ யிருக்கிறது. மண்டபம் 21-அடி 10-அங்குலம் சதுரம். அந்தராளத்திற்கும் மண்டபத்திற்கும் இடையிலுள்ள பல கணி சாளுக்கிய சில்பமமைந்தது. கர்ப்பக்கிரஹம் 9-அடி 3-அங்குலம் சதுரம். இதற்கு பிரதட்சிண மார்க்கம் கிடை யாது. வாயில்களும் வெளிச் சுவர்களும் அழகிய வேலைப் பாடுள்ளவை. இக்கோயிலில் தற்காலம் பூசையில்லை. இது தற்காலம் ஒரு பள்ளிக்கூடமாக உபயோகிக்கப்பட்டு வருகிறது. இங்கு **திரிகூடேஸ்வரர்** கோயில் என்று ஒரு சிவாலயமுண்டு; இது இங்குள்ள பேட்டையிலிருக்கிறது. சாளுக்கிய சில்பம்; 3-சந்நிதிகளை யுடையது. இங்குள்ள ஒரு கல்வெட்டினால் இது 10-ஆம் நூற்றாண்டில் மராமத்து செய்யப்பட்டதாக தெரிகிறது. ஆகவே கோயில் அதற்கு முந்தியதாயிருக்க வேண்டும். பழய சிகரம் அழிந்துபோய் புதியதாக செங்கல் சிகரம் அமைக்கப்பட்டிருக்கிறது. (3) **ராமேஸ்வரர்** கோயில்; சாளுக்கிய சில்பம்.

**கடத்தூர்**—உடுமலைபேட் தாலுகா, கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம் பழயது; சோழ கட்டடம்.

**கடகம்**—சென்னை ராஜதானி, கஞ்சம் ஜில்லா சிவாலயம்.

**கடப்பேரி**—மதுராந்தகம் தாலுகா, செங்கல்பட்டு ஜில்லா சென்னை ராஜதானி; சிவாலயம். ஸ்வாமி-வேதாரண்யேஸ் வரர்; சோழ கட்டடம்; பல கல்வெட்டுகள் உள.

**கடப்பை**—மேற்படி ஜில்லா, சென்னை ராஜதானி, எம். எஸ். எம். ரெயில் ஸ்டேஷன்; சிவாலயம். ஸ்வாமி மஹா தேவர்; தேவி-பார்வதி; சிவ தீர்த்தம்.

**கடம்பர்கோயில்**—காஞ்சீபுரம் தாலுகா, செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம். ஸ்வாமி-கடம்ப நாதேஸ்வரர், தேவி-ஆவுடைய நாயகி; காசி தீர்த்தம்; கடம்பர், கண்வர் பூசித்த க்ஷேத்திரம். இங்குள்ள பல கல் வெட்டுகளில் ஸ்வாமி பெயர் கடம்பத்துறை உடையார் என்றிருக்கிறது.

**கடம்பர்மலை**—திருச்சிராப்பள்ளி ஜில்லா, சென்னை ராஜதானி, குளித்தலை ஸ்டேஷனுக்கு 1-மயில். சிவாலயம். இங்கு சிவலிங்கத்திற்கு அபிஷேகமாகும்போது எதிரில் சுப்பிரமணியருக்கும் அபிஷேகமாகிறது விசேஷம்.

**கடம்பலூர்**—தென் இந்தியா இடங்கழி நாயனர் பூசித்த க்ஷேத்திரம்.

**கடம்பத்துறை**—இதற்கு கடம்பர் கோயில் என்றும் பெயர் உண்டு. குளித்தலை ஸ்டேஷனுக்கு $1\frac{1}{4}$-மயில் வட மேற்கு. கண்வர் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி-கடம்பவன நாதேஸ்வரர்; தேவி-முற்றிலாமுலையம்மை; காவிரி நதி ஞான தீர்த்தம்; கடம்பவிருட்சம்; வடக்கு பார்த்த சந்நிதி. சிவபெருமான் கடம்பவிருட்சத்தில் தோற்றியதாக ஐதிகம். திருநாவுக்கரசு சுவாமிகள் பாடல் பெற்றது.

**கடம்பர்**—**மேலைக்கடம்பூர்** எனவும் வழங்கப்படுகிறது. சென்னை ராஜதானி மாம்புலியூருக்கு 4-மயில் மேற்கிலுள்ளது. இந்திரன் இங்கு அமிர்தம்வேண்டி ஸ்வாமியைப் பூசித்தனன். ஸ்வாமி-அமிர்தகடேஸ்வரர்; தேவி-ஜோதி மின்னம்மை; ஆதிதீர்த்தம்; அமுத தீர்த்தம்; திருஞான சம்பந்தர் அப்பர் பாடல் பெற்றது.

**கடலாடி**—வட ஆற்காடு ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம் ஒரு சிறு குன்றில் இருக்கிறது.

**கடலி**—கோதாவரி ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம். கபொதேஸ்வரர் கோயில்.

**கடலுண்டி**—மலபார் ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம்.

**கடலூர்**—கூடலூர் என்றும் வழங்கப்படுகிறது. இது தான் சரியான பெயர்; கெடிலமும் தெற்குப் பெண்ணையும் கூடுமிடம்; தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன். சென்னை ராஜதானி; அர்த்தநாரீஸ்வரர் கோயில்; பிரம்மோற்சவம் பங்குனி மாசம். இங்கு முச்சாபர் பங்களா உண்டு, சத்திரமு முண்டு. கடலூர்பழயபட்டணத்தில் காசி **விஸ்வநாதர் கோயிலென்று** ஒரு சிவாலயமுண்டு.

**கடஸ்**:—வட இந்தியா இதற்கு கடாட்சம் என்றும் பெயர்; ஸ்வாமி சிவகடாட்சம்; பூரணதேவி; நேத்திரசரஸ்.

**கடயநல்லூர்**—திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜ தானி, கடையாலீஸ்வரர் கோயில்.

**கடையூர்-திருக்கடையூர்**—திருக்கடவூர் என்றும் சாதாரணமாக அழைக்கப்படுகிறது. சென்னை ராஜதானி மாயவரத்துக்கு 13-மயில் தென்கிழக்கு; அஷ்டவீரட்டான க்ஷேத்திரங்களிலொன்று. மார்க்கண்டேயருக்காக சிவ பிரான் லிங்கத்திலிருந்து உத்பவித்து யமனை உதைத்த க்ஷேத்திரம். இது கோயிலில் சிலையில் செதுக்கப்பட்டிருக்கிறது. குங்கிலியக்கலய நாயனர், காரிநாயனர் வசித்த க்ஷேத்திரம் ஸ்வாமி-அமிர்தகடேஸ்வரர், காலகாலதேவர்; தேவி-அபிராமியம்மை. சிவகங்கை தீர்த்தம், அமிர்த தீர்த்தம்; பில்வ விருட்சம். காலசம்ஹாரமூர்த்திக்கு பிரத்யேக சந்நிதியுளது. பிரம்மோற்சவம் சித்திரைமாசம்; காலசம்ஹார உற்சவம்விசேஷம். கார்த்திகைமாசம் கங்காபிஷேகம். கோபுரம் 7-நிலைகள் உடையது. மூவர் பாடல்பெற்றது. ஆயிரவருடங்களுக்கு முற்பட்ட கல்வெட்டுகள் உள. இங்குள்ள சிறு சிவாலயங்கள்-கூத்தாடு தேவர் கோயில், குலோத்துங்க சோளீஸ்வரர் கோயில், விக்ரமசோளீஸ்வரர் கோயில். இங்குள்ள ராய கோபுரத்திற்கு முனீஸ்வரர் கோபுரம் என்று பெயர். இங்குள்ள 150-கால் மண்டபம் அழகியது. இங்கு யமதர்மனுக்கு புதிதாய் கோயில் கட்டப்பட்டுள்ளது; தர்மபுர ஆதீனம் மேற் பார்வை.

**கடவூர்மயானம்**—மயானம், திருக்கடவூர் மயானம், என்றும் அழைக்கப்படுகிறது. திருக்கடையூருக்கு 1-மயில் தெற்கிலுள்ளது. பிரம்மா சிவபெருமானைப் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி-பிரமபுரீஸ்வரர்; தேவி-மலர்க்குழல் மின்னம்பிகை. காசி தீர்த்தம்; மூவர் பாடல் பெற்றது. பங்குனி மாசம் இங்குள்ள திருக்குளத்தில் காசி கங்கை வருவதாக ஐதிகம். சிவபெருமான் பிரமதேவரை நீறாக்கி மறுபடியும் சிருஷ்டித்த ஸ்தலம்.

**கடிக்குளம்**—சென்னை ராஜதானி, கற்பகனர் கோயில் எனவும் அழைக்கப்படுகிறது. திருத்தருபூண்டிக்கு $10\frac{1}{2}$-மயில் தென்கிழக்கு, இடும்பாவனத்திற்கு 1-மயில் கிழக்கு விநயகர் பந்தயத்தில் மாம்பழத்தை வென்ற க்ஷேத்திரம். ஸ்வாமி-கற்பகேஸ்வரர், தேவி-சௌந்தர நாயகி. விநயகர் தீர்த்தம்; திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**கடுவாய்க்கரைபுத்தூர்**—(திரு)தற்காலம் ஆண்டார் கோயில் என வழங்கப்படுகிறது. காசிபரிஷி பூசித்த ஸ்தலம் சென்னை ராஜதானி, நீடாமங்களம் ஸ்டேஷனிலிறங்கி 11-மயில் போகவேண்டும். சாத்தமங்கைக்கு 4-மயில் மேற்கு; காஸ்யபர் பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி-சுவர்ண புரீஸ்வரர்; தேவி-சிவாம்பிகை. அப்பர் பாடல்பெற்றது.

**கடைமுடி**—கீழூர், கீழையூர் எனவும் பெயர் பெற்றது. ஆனைதாண்டவபுரத்திற்கு 6-மயில் வடகிழக்கிலுள்ளது. பிரம்மா, லட்சுமி பூசித்த க்ஷேத்திரம். ஸ்வாமி-கடைமுடி நாதேஸ்வரர்; தேவி-அபிராமியம்மை. கடைமுடி தீர்த்தம்; திருஞான சம்பந்தர் பாடல் பெற்றது.

**கண்டசாலா**—பந்தர் தாலுகா கிருஷ்ணா ஜில்லா, சென்னை ராஜதானி. இங்கு இரண்டு சிவாலயங்கள் உள. **(1) ஜலகேஸ்வர ஸ்வாமி கோயில், விஸ்வேஸ்வர ஸ்வாமி கோயில்.**

**கண்டலாரா**—கார்கல் தாலுகா, தென்கன்னட ஜிலலா சென்னை ராஜதானி; காந்தேஸ்வரர் கோயில்; சோழ கட்டிடம்; பல கல்வெட்டுகள் உள.

**கண்டலூர்**—கடப்பை ஜில்லா, சென்னை ராஜதானி. சங்கமேஸ்வர ஸ்வாமி கோயில்; கிலமாயிருக்கிறது.

**கண்டியூர்**—தஞ்சாவூர் ஜில்லா, தஞ்சாவூருக்கு 6-மயில் வடக்கு, திருவையாறுக்கு 1-மயில்; சென்னை ராஜதானி; அஷ்ட வீரட்டான ஸ்தலங்களில் ஒன்று. பிரமன் சிரம் கொய்த தலம். ஸ்வாமி, வீரட்டானேஸ்வரர்; தேவி மங்கள நாயகி; காவிரி நதி. சப்த ஸ்தானத்து க்ஷேத்திரங்களில் ஐந்தாவது ஸ்தானம். பிரம்மோற்சவம் வைகாசி மாதம்; முத்துப் பல்லக்கு உற்சவம் விசேஷம். கோயில் மேற்கு பார்த்தது, பழய கோயில்; இங்கு பல கல்வெட்டுகள் உள. கோயிலில் சில சாளுக்கிய சில்பங்களும் இருக்கின்றன. கொய்யப்பட்ட பிரமன் தலை சந்திரசேகரர் ஆலயத்தி லிருக்கிறது. திருஞானசம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது. இங்கு கிழக்குபார்த்த கோயில் ஒன்று இருக்கிறது. அந்த ஸ்வாமிக்கு பிரம சிர கண்டகர் என்று பெயர்.

**கண்டனூர்**—சென்னை ரராஜதானி, செட்டிநாடு. சிவஸ் தலம்; ஸ்வாமி சுந்தரேஸ்வரர், தேவி மீனாட்சியம்மன்; பிரம் மோற்சவம் ஆனி மாதம்.

**கண்டியூர்**—இப் பெயர்கொண்ட ஒரு ஊர் திருவாங்கூர் ராஜ்யத்திலுள்ளது, சிவாலயம். மலையாள தேசத்தில் இது ஒரு பிரபலமான சிவஸ்தலம்.

**கண்டீஸ்வரம்**—சென்னை ராஜதானி நங்கிலம் ஸ்டேஷனுக்கு $1\frac{1}{8}$-மயில் மேற்கு; சிறிய கோயில். கோயிலின் மூன்று பக்கங்களில் அகழ் இருக்கிறது, மஹாமண்டபத்தில் கல்வெட்டுகள் உள. உமை பசுவாக பரமசிவத்தைப் பூசித்தபடியால் கோயிலுக்கு பசுபதீஸ்வரம் என்று பெயர். லிங்கத்தில் பசுவின் கொம்பு முட்டின வடுவுளது. சுயம்பு லிங்கம். கோயில் விமானம் தஞ்சாவூர் கோயில் விமானத்தைப்போன்றது. பழய சோழ கட்டடம்.

**கண்டுகோல்**—தார்வார் ஜில்லா ஜயகண்டிஸ்டேட்டில் உள்ளது. பெங்களூர் பூனாரெயில் மார்க்கத்திலுள்ள ஸ்டேஷன். சிவாலயம், **சம்புலிங்கம் கோயில்**. கோயில் சுண்ணும்பிலலாமல் கட்டப்பட்டது. சிலபாகம் அந்நிய மதஸ்தர்களால் அழிக்கப்பட்டிருக்கிறது. இங்கு ஸ்ரீராமர் இலட்சுமணர் சீதை முதலியவர்கள் சிலைகள் இங்கிருக்கின்றன. சிலகாலம் வைஷ்ணவ ஆலயமாயிருந்து பிறகு சிவாலயமாக மாற்றப்பட்டதென கசின்ஸ் துரை எண்ணுகிறார். இங்குள்ள பிராம்மணர்கள் ஆதியில் இது ஜைன ஆலயமா யிருந்ததெனக் கூறுகிறார்கள்.

**கண்ணன்குடி**—ராம்நாட் ஜில்லா, சென்னை ராஜதானி மிகவும் பழய சிவாலயம். 651-ஆம் ஆண்டில் கரிகாலச் சோழனல் கட்டப்பட்டது. சோழ கட்டிடம்.

**கண்ணபுரம்**—சென்னை ராஜதானி சிவாலயம்; ஸ்வாமி திருவீர மண்டீஸ்வரமுடையார். செங்கல் கட்டிடம் 900 வருஷங்களுக்கு முற்பட்ட கோயில்.

**கண்ணனூர்**—தென் இந்தியா; மலையாள தேசம் சிவாலயம்.

**கண்ணனூர்**—ஸ்ரீரங்கத்திற்கு அருகிலுள்ளது. திருச்சிராப்பள்ளி ஜில்லா, சென்னை ராஜதானி, ஹொய்சாலேஸ்வரர் கோயில், போஜனீஸ்வரர் கோயில் என்றும் அழைக்கப்படுகிறது. கல்வெட்டுகளில் போஜனீஸ்வரமுடைய நாயனர் என்று ஸ்வாமி பெயர் இருக்கிறது. இவ்வூருக்கு பழய பெயர் விக்ரமபுரம். ஹொய்சல அரசர் வீரசோமேஸ்

வரரால் கட்டப்பட்டது. (1234-1254) பல கல்வெட்டுகள் உள.

**கண்ணவரம்**—கோதாவரி ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம். இங்குள்ள சிவலிங்கம் கருடனால் நருமதை யாற்றிலிருந்து கொண்டுவரப்பட்டதாக ஐதிகம்.

**கண்ணன்குடி**—புதுக்கோட்டை சமஸ்தானம், சென்னை ராஜதானி, இங்கு கிலமாய்ப்போன ஒரு சிவாலய மிருக்கிறது.

**கண்ணார்கோயில்**—இதற்கு குருமாணக்குடி என்றும் பெயர், சென்னை ராஜதானி வைதீஸ்வரன் கோயிலுக்கு 2-மயில் மேற்கு. வாமனாவதார விஷ்ணு பூசித்த இடம். இந்திரன் சாபம் நீங்கி 1000 கண்கள் பெற்ற ஸ்தலம்; எனவே கண்ணார் கோயில் எனப் பெயர்பெற்றது. ஸ்வாமி: கண்ணாயிரேஸ்வரர், தேவி முருகுவளர் கோதையம்மை. இந்திரதீர்த்தம்; மணிகர்ணிகை. திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**கண்ணபதி**—சென்னை ராஜதானி, மதுரை ஜில்லா, இதற்கு பறியா பருத்துப்பட்டி என்றும் பெயர். சிவாலயம் ஸ்வாமி பறியா மருத்தீசர்; தேவி உமை-சர்வாநந்த தீர்த்தம் வைப்புஸ்தலம்.

**கணபதி பாளயம்**—கோயமூத்தூர் ஜில்லா, தாராபுரம் தாலுகா சென்னை ராஜதானி, பழய சிவாலயம். பல கல்வெட்டுகள் உள.

**கணபக்தி**—வங்கோல் தாலுக்கா குண்டூர் ஜில்லா, சென்னை ராஜதானி, இங்கு ஒரு சிவாலய முண்டு.

**கணேசஸ்தானம்** — வட இந்தியா அயோத்திக்கருகிலுள்ள சிவாலயம். ஸ்வாமி ராமநாதர்; தேவி பர்வதராஜ புத்ரி. இங்கு கணேசர் பூசை முக்கியம்.

. **கத்தேவார் பிரிவு**—வடமேற்கு இந்தியா, இப்பிரிவில் அடியிற்கண்ட சிவாலயங்கள் உள. (2) **பாட்டனங்** சிவாலயம் ஸ்வாமி-பீம்நாத்; பிரமனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் (2) **முஸ்துவார்கா** சிவாலயம் ஸ்வாமி ருத்ரேஷ்வர். இதற்கு ருத்திரகயா என்று பெயர். (3) **கிரான்கச்** இங்கு ஒரு சிறு கிணற்றில் ஒரு சிறு சிவாலயமுண்டு. இதற்கு எதிரில் நந்தியுண்டு (4) கோய்லி சிவாலயம். ஸ்வாமி திரி

நேத்ரர்; இக்கோயில் 1265-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. (5) காம்பிடா சிவாலயம் (6) ஹதாப் சிவாலயம், ஸ்வாமி நீலகண்ட மஹாதேவ். ஆற்றின் முகத்துவாரத்தில் மற்றொரு சிவாலயமுண்டு, ஸ்வாமி நிஷ்களங்கமஹாதேவ் (7) கோப்நாத் சிவாலயம், ஸ்வாமி யேக்நாத் மஹாதேவ் (8) கேலர் சோம்நாத், இங்கு சிவாலயத்திலுள்ள சிவலிங்கம் பாடன் சோம்நாத்தி லிருந்துகொண்டு வரப்பட்டதென்பர்; ஸ்வாமி சோம்நாத் (9) பிராசிகுண்ட் சிவாலயம், ஆற்றின் கரையிலுள்ளது. ஸ்வாமி பாதேஷ்வர் மஹாதேவ்; இங்குள்ள லிங்கம் மிகவும் பெரியது. சந்ததி இல்லாத ஸ்திரீகள் இதை ஆலிங்கனம் செய்துகொள்வது வழக்கம். (9) பிண்டாரா சிவாலயம். ஸ்வாமி கபாலமோட்ச மஹர்தேவ், மோக்ஷேஸ்வர் மஹாதேவ். அகஸ்திய தீர்த்தம் (10) சிஹோர் சிவாலயம்; ஸ்வாமி கௌதமேஷ்வர் மஹாதேவ். நீலகண்டேஷ்டர் கோயில் என்று மற்றொரு சிவாலயமுமுண்டு இவ்விடம் (11) திமாறு சிவாலயம். ஸ்வாமி பிர்த்விதிவேஷ்வரர் (12) த்ராங்கடரா சிவாலயம். ஸ்வாமி கோலேஷ்வரர் (13) தாம்லேக் சிவாலயம்; சோம்நாத் மஹாதேவர். அன்றியும் ¼-மயில் தூரமுள்ள ஒரு குகையில் தானேஷ்வர் மஹாதேவர் சிவாலயமிருக்கிறது. (14) சோகட்; இங்கு ஒரு சிறு குன்றின்மீது ஒரு சிவாலய முண்டு. ஸ்வாமி-தாபநாத் மஹாதேவர் (15) பிலேஷ்லக் சிவாலயம் ஸ்வாமி-பிலேஷ்வர் ஸ்ரீ கிருஷ்ணபகவானுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் என்பர். சிவராத்திரி விசேஷம். (16) பன்வாட் சிவாலயம். ஸ்வாமி சித்திகேஷ்வர் மஹாதேவ் (17) பாலாசரி சிவாலயம், சமுத்திரக் கரையோரம் உள்ளது. ஸ்வாமி மாலேஷ்வர் (18) கோடினர் சிவாலயம் ஸ்வாமி கோடேஷ்வர் மஹாதேவ் (19) ஆந்தாலியா சிவாலயம் ஸ்வாமி அந்தாளேஷ்தர். சுயம்பு லிங்கம் என்பர் (20) ஆநந்தபூர் சிவாலயம்-ஸ்வாமி ஆநந்தேஷ்வர்; கோயில் 1124-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது.

கத்ரி—மங்களூர் தாலுகா, சென்னை ராஜதானி, தென் கென்னட ஜில்லா, சிவாலயம் மங்களூருக்கு 2½-மயில்; ஸ்வாமி லோகேஷ்வரர்.

கதிரி—அநந்தபூர் ஜில்லா சென்னை ராஜதானி; இங்குள்ள விஷ்ணு ஆலயத்தின் பிராகாரத்தில் வீரபத்திர ஸ்வாமி கோயில் இருக்கிறது. அன்றியும் அருகாமையில் மற்றொரு

சிவாலயமு மிருக்கிறது. மகம்மதியர்கள் கலக காலத்தில் இவ்விரண்டு கோயில்களின் விக்ரஹங்கள் வேறொரு இடத்தில் பாதுகாப்புக்காக வைக்கப்பட்டு, பிறகு கோயில்களில் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்தபொழுது; அம்மன் விக்ரஹங்கள் மாறுபாடாய் வைக்கப்பட்டன. ஆகவே சிவாலயத்தில் லட்சுமியும், விஷ்ணு ஆலயத்தில் பார்வதியும் பிரதிஷ்டை செய்யப்பட்டன. தற்காலமும் அப்படியே அவைகளுக்கு பூஜை நடந்தேறி வருகிறது.

**கந்தர்வ கோட்டை**—சென்னை ராஜதானி தஞ்சாவூர் ஜில்லா, சிவாலயம்; ஸ்வாமி ஆபத்சகாயர். தஞ்சாவூருக்கு 18-மயில. இதற்கு கண்டரக்கோட்டை என்றும் பெயர்.

**கந்தமாதனம்** — இந்தியாவின் தென்கோடியிலுள்ளது. சிவாலயம், சுயம்பு லிங்கம்-பூர்புவர், தனுஷ்கோடி தீர்த்தம்.

**கபிலமலை**—நாமக்கல் தாலூகா சென்னை ராஜதானி. சிவாலயம், கபிலர் பூசித்தது. இங்குள்ள மண்டபங்கள் நாயக்க அரசர்கள் காலத்தில் கட்டப்பட்டனவாம்.

**கம்படுரு**—கல்யாண் துர்க்கம் தாலூகா, அநந்தபூர் ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம், சளுக்கிய கட்டிடம்; கோயில் இடிந்திருக்கிறது. பூர்வத்தில் ஜைன ஆலயமாயிருந்து மாற்றப்பட்டதாக எண்ணப்படுகிறது.

**கம்பயநல்லூர்**—ஊத்தங்கரை தாலூகா, சேலம் ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம் - ஸ்வாமி - தேசிநாயகர். சோழக் கட்டிடம். கல்வெட்டுகள் உள.

**கமலாபுரம்** — தென் இந்தியா ரெயில் ஸ்டேஷன் சிவாலயம்.

**கம்பில்**—வட இந்தியா சிவாலயம், ஸ்வாமி பரமேஸ்வரர் பார்வதிதேவி; கங்கைநதி; கபிலர் பூசித்தது.

**கம்பிளியூர்**—தென் இந்தியா சிவாலயம். நமசிவாய நாயனர் பூசித்த ஸ்தலம்.

**கயத்தாறு**—(கஜநதி) திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி, சிவாலயம்.

**கயாக்கரை**—சென்னை ராஜதானி தஞ்சாவூர் ஜில்லா சிவாலயம்; ஸ்வாமி ராமலிங்கேஸ்வரர்.

**கயாபிரிவு**—வட இந்தியா வங்காள ராஜதானி. இங்கு கீழ்கண்டை சிவாலயங்கள் உள. (1) **பக்ரார்** மார்தங்கேஷ்வர் கோயில் (2) **ராமசிவா** இக்குன்றில் ஒரு சிவாலயமுண்டு ஸ்வாமி - பாதாளேஷ்வர் மஹாதேவ், தேவி - பார்வதி. கோயில் 1014-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. (3) **கோன்ச்** தேகளிக்கு 4-மயில் சிவாலயம், ஸ்வாமி சிவகொச்சேஸ்வரர் (4) கயாபட்டணம், சிவால்யம் சுயம்பு லிங்கம். ஸ்வாமி பிரபிதாமஹர்-கதாதர்; ஊர் ஸ்டேஷனிலிருந்து 3-மயில்; ஸ்டேஷனுக்கு ½-பர்லாங்கில் தர்மசாலையுண்டு.

**கரம்பனூர்**—சென்னை ராஜதானி இதற்கு 'உத்தமர் கோயில்' என்றும் பெயர். சிவாலயம் இங்கு பிரம்மாவுக்கும் மஹாவிஷ்ணுவுக்கும் சந்நிதிகள் உண்டு.

**கர்ணக்கிரஹம்**—பாகல்பூர் ஜில்லா, வங்காள ராஜதானி, பாகல்பூர் பட்டணத்திற்கு அருகாமையிலுள்ளது. இங்கு ஒரு குன்றில் 4 சிவாலயங்களுண்டு; அவைகளில் ஒன்று நர்மதைக் கரையிலிருந்து கொண்டுவரப்பட்ட சலவைக்கல்லால் ஆயது. பாரத வீரனுகிய கர்ணன் பூசித்த ஸ்தலம் என்பர்; இங்கு 3 பெரிய தர்மசாலைகளுண்டு.

**கர்ணிகாரம்**—வட இந்தியா; சிவாலயம், ஸ்வாமி கஜாத்யட்சர். சுயம்புலிங்கம்.

**கர்முக்தேஷ்வர்**—வட இந்தியா; மீரட் ஜில்லா, அயோத்யா ரோஹில்கண்ட் றெயில்வே; டில்லி பிரிவில் ஸ்டேஷனிருக்கிறது. மீரட் ஸ்டேஷனிலிருந்து 2 மயில். சிவாலயம்; ஸ்வாமி முக்தேஷ்வர் மஹாதேவ்; கங்காதீர்த்தம்; தர்மசாலையுண்டு.

**காவீரம்**—வட இந்தியா; சிவாலயம், சுயம்புலிங்கம்; ஸ்வாமி க்ருதலிங்கேஷ்வரர்.

**கரவிரம்** — திருக்கரையபுரம் என்றும் வழங்கப்படுகிறது. சென்னை ராஜதரனி, குளித்தலை ஸ்டேஷனுக்கு 5 மயில் வடமேற்கு; கௌதமர் பூசித்த ஸ்தலம். ஸ்வாமி கரவீரேஸ்வரர், தேவி, பிரத்யட்ச மின்னம்மை. அனவரத தீர்த்தம்; திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது.

**கர்னூல்**—சென்னை ராஜதானி, கர்னூல் ஜில்லா. சிவாலயம்.

**கரன்—பிரயாக்.** வட இந்தியா ஹரத்துவார் ரெயில் ஸ்டேஷனுக்கு அருகிலுள்ளது. சிவாலயம்; ஸ்வாமி, உமேஸ்வர், தேவி பார்வதி. தீர்த்தங்கள், கங்கை; அளகநந்தாநதி.

**கரிமங்கலம்**—தென் இந்தியா தாராபுரத்திற்கு அருகிலுள்ளது. சிவாலயம், ஸ்வாமி; அருணேஸ்வரர்.

**கரிவல நல்லூர்—கரிவலம் வந்தநல்லூர்,** கருவை நல்லூர் என்றும் வழங்கப்படுகிறது. தென் இந்தியா சிவாலயம், கோவில்பட்டிக்கு 29 மயில். ஸ்வாமி, பால்மணத்தேஸ்வரர், தேவி, ஒப்பிலா நாயகி. குலசேகர பாண்டியன், திக்பாலர்கள் பூசித்த ஸ்தலம்.

**கருக்குடி—திருக்கருக்குடி, மருதாந்த நல்லூர்** எனவும் பெயருண்டு. சென்னை ராஜதானி, கும்பகோணத்திலிறங்கி $7\frac{1}{2}$ மயில் போகவேண்டும். பிரமன், விஸ்வாமித்ரர், மார்க்கண்டர் முதலியோர் பூசித்த ஸ்தலம். இங்கு ஓர் வணிகன் அபுத்தி பூர்வகமாய் மாதுர்கமனம் செய்த தோஷம் நீங்கப்பெற்ற ஸ்தலம். அவனது உருவம் தேவி சந்நிதியிலிருக்கிறது. ஸ்வாமி, சற்குணநாதர்; தேவி, சர்வாலங்கிருத மின்னம்மை. ஏம தீர்த்தம், லிங்கம் சைகதம். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**கருகாவூர்—திருக்கருகாவூர், திருக்களாவூர்** என்றும் பெயருண்டு. சென்னை ராஜதானி பாபநாசம் ஸ்டேஷனுக்கு 4 மயில் தெற்கு. அம்பிகை மருத்துவதியாகி உதவிய க்ஷேத்திரம், கருவைக் காத்தபடியால் கருகாவூர் என்று பெயராயிற்றென்பர். சந்திரன் பூசித்த ஸ்தலம். சிவாலயம், ஸ்வாமி முல்லைவனேஸ்வரர்; தேவி, கரும்பனவல்லியம்மை; பிரமதீர்த்தம். திருஞானசம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

**கருகுபில்லி**—(கருகு மல்லி) விசாகப்பட்டணம் ஜில்லா சென்னை ராஜதானி, சிவாலயம் குகைக்குள் இருக்கிறது. கார்த்திகை மாசம் மாத்திரம்தான் சிவபூஜையுண்டு.

**கருங்குயில்நாதன்பேட்டை**—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா; சிவாலயம் ஸ்வாமி சக்திபுரீஸ்வரர், கருங்குயில் தீர்த்தம்; தர்மபுர ஆதீனத்தின் மேற்பார்வையிலடங்கியது.

**கருங்குடி**—திருநெல்வேலி ஜில்லா, சென்னை ராஜதானி இங்கு விஷ்ணு ஆலயத்தில் ஒரு சிவாலயமுண்டு. ஸ்வாமி பக்கல்நின்றார்; இக்கோயிலில் பாண்டியன் மாறன் சடையனது கல்வெட்டிருப்பதால் சுமார் 1000-வருடங்களுக்கு முற்பட்டதெனக் கூறலாம்.

**கருணம்பேட்டை**—சென்னை ராஜதானி தஞ்சாவூர் ஜில்லா; இதற்கு கருணபுரி என்றும் பெயர். மாயவரத்திற்கு அருகிலுளது. சத்த மாதாக்களுள் ஒருத்தியாகிய மஹேஸ்வரி பூசித்தது.

**கருணேஸ்வரர்கோயில்**—மத்திய இந்தியா, நிஜாம் ராஜ்யம்; தௌலதாபாத் ஸ்டேஷனிலிருந்து 10-மயில் தூரம். வட இந்தியா 12 ஜோதி லிங்கங்களுள் ஒன்று இங்கு உளது.

**கருந்தட்டான்குடி**—தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி தஞ்சாவூரில் ஒருபாகம். ஸ்டேஷனிலிருந்து 1-மயில் சிவாலயம் ஸ்வாமி வசிஷ்டேஸ்வரர், தேவி பெரியநாயகி; கோயில் சோழகட்டிடம். வசிஷ்ட தீர்த்தம் இதில் மூழ்கினல் விஷக்கடி தீருமென்பர். தேவார வைப்புஸ்தலம்.

**கருப்பறியலூர்**—மேலைக்காழி என்றும் தலைஞாயிறு என்றும் பெயருண்டு. சென்னை ராஜதானி, வைதீஸ்வரர் கோயிலிலிறங்கி 5-மயில் போகவேண்டும். சிவாலயம்; இந்திரனுடைய குற்றத்தைப் பொறுத்தபடியால் சுவாமிக்கு குற்றம்பொறுத்த நாதேஸ்வரர் என்று பெயர், தேவி கோல்வளை நாயகி, தீர்த்தம் இந்திர தீர்த்தம், சூரிய தீர்த்தம்; திருஞானசம்பந்தர் சுந்தரர் பாடல்பெற்றது.

**கரும்பாடு**—தென் இந்தியா சிவாலயம்; ஸ்வாமி நாதத்தேஸ்வரர், தேவி ஞானப்பிரசன்னம்பாள்; திரிசூல தீர்த்தம்.

**கருப்பூர்**—இது மிஞ்சக்குப்பூர் என்றும் அழைக்கப்படுகிறது. தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி கும்பகோணத்திற்கு 3-மயில் சிவாலயம்; ஸ்வாமி அமிர்தேஸ்வரர் தேவி அபிராமி அம்மன்; சூரிய தீர்த்தம்.

**கருவிலி**—சென்னை ராஜதானி, திருவெண்ணையூருக்கு 2-மயில் தென்மேற்கு ஆடுதுறையிலிருந்து $8\frac{1}{2}$-மயில்; இந்திரனும் தேவர்களும் பூசித்த க்ஷேத்திரம், சற்குணன் எனும்

அரசன் பூசித்து முத்திபெற்ற ஸ்தலம். ஸ்வாமி சற்குணேஸ்வரர், தேவி சர்வாங்க நாயகி; ஆலயத்திற்கு கொட்டிட்டை என்று பெயர்.

கருவூர் ஆநிலை—திருஆநிலை என்றும், கருர் எனவும் பெயருண்டு. இதற்கு பாஸ்கர க்ஷேத்திரம் என்றும், முடிவழங்கு சோழபுரம் என்றும் பெயர் உண்டு. பிரளயத்திற்குப் பிறகு உலகினைச் சிருஷ்டிக்க பிரமதேவர் இவ்வூரில் கரு உற்பத்தி செய்தபடியால் கருவூர் என்று பெயர் வந்ததாம். இவ்வூருக்கு ஆதிபுரி என்றும் பெயர் உளது. காமதேனு பூசித்தபடியால் ஆநிலையென்று பெயர்பெற்றது. சிவாலயத்திற்கு ஆநிலை என்று பெயர். புகழ்ச் சோழநாயனருடைய ராஜதானி; சிவகாமியாண்டார் இருந்த இடம். எரிபத்த நாயனர் முத்தியடைந்த ஸ்தலம், திருவிசைப்பா பாடிய கருவூர்த்தேவர் அவதரித்து முத்தியடைந்த ஸ்தலம்; இவருக்கு கோயிலில் சந்நிதியுண்டு. ஸ்வாமி பசுபதீஸ்வரர் அல்லது கல்யாண பசுபதீஸ்வரர், தேவி கிருபா நாயகி, அலங்காரவல்லி, சௌந்தரநாயகி. ஆம்பிராவதி தீர்த்தம், காம தீர்த்தம், தாடகை தீர்த்தம், முருக தீர்த்தம், அரசதீர்த்தம், தேனு தீர்த்தம் என 6-உண்டு. பழய ஆலயம்; 1000-வருடத்திற்கு முற்பட்ட கல்வெட்டுகள் இங்கு உண்டு. இவ்வூரில் 5 லிங்கங்கள் விசேஷம். பசுபதி லிங்கம் ஆநிலைக்கோயிலிலுள்ளது. வஞ்சுளேஸ்வரர் லிங்கம் வஞ்சுரேஸ்வரர் ஆலயத்திலுள்ளது. கோடீஸ்வர லிங்கம் கோடீஸ்வரர் ஆலயத்திலிருக்கிறது, கைலாசநாதலிங்கம், கரியமாலீசர் லிங்கம் இரண்டும், பசுபதீஸ்வரர் கோயிலிலுள்ளன தற்காலம். ஆநிலைக்கோயிலில் புகழ்ச்சோழருடைய சிலையும், அவரது யானையின் சிலையும் இருக்கின்றன. பசுபதீஸ்வரர் கோயிலில் இரண்டு அம்மன் சந்நிதிகள் உள. அலங்காரவல்லி, சவுந்தரநாயகி. இக்கோயில் 1906-ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டு நாட்டுக்கோட்டை செட்டிமார்களால் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இங்குள்ள லிங்கம் 5 அடி உயரம்; பசுவின் கொம்புபட்ட வடு இதில் இருக்கிறது. கோயிலில் பல கல்வெட்டுகள் உள. இங்கு முன் கூறியபடி, வஞ்சுரேஸ்வரர் கோயில் என்று மற்றொரு சிவாலயமுண்டு. இதற்கு அருகிலுள்ள வெண்ணெய் மலையில் விஸ்வநாதர்-விசாலாட்சி ஆலயம் உண்டு, கருவூரில் மூசாபர் பங்களா உண்டு. பிரம்மோற்சவம் பங்குனிமாதம்.

**கரூர்**—திருக்கரூர், திருவாங்கூர் ராஜ்யத்தில் இப் பெயர்கொண்ட ஊரில் ஒரு சிவாலயமுளது.

**கருப்பத்தூர்**—திருச்சிராப்பள்ளி ஜில்லா சென்னை ராஜ தானி, சிவாலயம்.

**கரையூர்** — திருமெய்யம் தாலுக்கா புதுக்கோட்டை சமஸ்தானம். புதுக்கோட்டைக்கு 15-மயில், பழய சிவால யம்.

**கரையேறவிட்ட நல்லூர்**—தென் இந்தியா நடு நாட்டு சிவாலயம். ஸ்வாமி காந்த நாதேஸ்வரர்; கடில தீர்த்தம். மாணிக்கவாசகருக்கு சிவபெருமான் கரையேற வழி காட் டிய ஸ்தலம்.

**கரோட்**—பிலாஸ்பூர் ஜில்லா, மத்திய மாகாணம். சிவா லயம் பாழாயிருக்கிறது.

**கல்கத்தா**—வட இந்தியா ரெயில்வே, ஹெளராஸ் டேஷன், வங்காள ராஜதானி; இங்கு கித்தேர் பஜாருக்குப் போகும் வழியில் பூகைலாஸ் எனும் சிவாலயம் உளது; சிவராத்திரி விசேஷம். இங்கு ஹெளராஸ்டேஷ னருகில் ஒரு தர்மசாலையுண்டு. இன்னும் பல சத்திரங்களும் உள. இங்கு தாரகேஷவரர்கோயில் என்னும் மற்றொரு சிவாலயம் ஹ —க்லியருகில் உள்ளது.

**கல்குளம்**—திருவாங்கூர் ராஜ்யம் சிவாலயம்; ஸ்வாமி நீலகண்டர்.

**கல்பாத்தி**—சென்னை ராஜதானி பாலக்காடு தாலுகா மலபார் ஜில்லா, கல்பாத்தி எனும் நதிக்கரையிலுள்ளது. சிவாலயம் பெரியது. கொல்லம் ஆண்டு 640-இல் காசியி லிருந்து ஒரு பிராம்மணஸ்திரீ லிங்கத்தைக் கொண்டுவந்து இங்கு பிரதிஷ்டை செய்தனள். கோயில் மலையாளத்தி லுள்ள கோயில்களைப்போல் ஓடுகள்வேய்ந்த கூரைகளை யுடையது. கோயில் பெரும்பாலும் மரத்தாலாயது. இங்கு ரதோற்சவம் விசேஷம்.

**கல்யாண்**—மேற்கு இந்தியா பம்பாய்க்கு அருகிலுள் ளது, ரெயிலஸ்டேஷன் அமபர்நாத் கோயில்; சுமார் 1060 ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. 84 × 61 அடி விஸ்தீரணம் கர்ப்பக்கிரஹம் தரைமட்டத்திற்கு 7-அடி கீழே இருக் கிறது, 13-அடி சதுரம். கோயில் வட இந்திய ஆரிய சில்பம்; பாழாயிருக்கிறது.

**கல்லல்** — சென்னை ராஜதானி திருப்புத்தூருக்கு 8 மயில் சிவாலயம், ஸ்வாமி சோமசுந்தரேஸ்வரர், தேவி சௌந்தரநாயகி.

**கண்யாணகிரி**—வட இந்தியா, இமயமலைச் சாரலிலுள்ளது. சிவாலயம் ஸ்வாமி கல்யாணேஸ்வரர், பார்வதி தேவி, பார்வதி கல்யாணமான ஸ்தலம்.

**கல்லிடைக்குறிச்சி**—அம்பாசமுத்திரம் தாலூகா, திருநெல்வேலி ஜில்லா சென்னை ராஜதானி ரெயில்ஸ்டேஷன் நாகேஸ்வரமுடையார் கோயில்; ஸ்வாமிக்கு மானேந்தியப்பர் என்றும் பெயருண்டு.

**கலக்காடு**—திருநெல்வேலி ஜில்லா, நாங்குநெறிதாலூகா சென்னை ராஜதானி, சிவாலயம் ஸ்வாமி சத்யவாகீஸ்வரர். திருவாங்கூர் வீரமார்த்தாண்ட அரசரால் கட்டப்பட்டது. பிரம்மோற்சவம் வைகாசிமாதம்; இதில் நான்காம்நாள் உற்சவம் ஒரு அன்னிய மதஸ்தரால் செய்யப்படுகிறது.

**கலக்குடி**—திருக்கலக்குடி தென் இந்தியா, சிவாலயம் ஸ்வாமி சகல புவனேஸ்வரர், தேவி உமை, பத்மதீர்த்தம்; நளாயினி பூசித்த ஸ்தலம்.

**கலகடா**—மதனபல்லி தாலூகா சென்னை ராஜதானி சித்தேஷ்வர் கோயில்.

**கலப்பல்** — திருத்தருபூண்டி தாலூகா தஞ்சாவூர் ஜில்லா சென்னை ராஜதானி, சிவாலயம் ஸ்வாமி அழகிய நாத ஸ்வாமி, இங்கு கைலாசநாதர் கோயில் என்று ஒரு சிவாலயமு முளது.

**கலப்பூர்**—திருக்கலப்பூர், உடையார்பாளையம் தாலூகா திருச்சிராப்பள்ளி ஜில்லா சென்னை ராஜதானி, சிவாலயம் ஸ்வாமி கொடிவன ஸ்வாமி; கோயில் சோழக் கட்டடம். கல்வெட்டுகள் உள.

**கலயநல்லூர்** — திருக்கலயநல்லூர், சாய்க்கோட்டை, எனவும் பெயர் உண்டு, கும்பகோணத்திற்கு ½-மயில் தூரத்திலிருக்கிறது. சென்னை ராஜதானி, பிரளயகாலத்தில் அழியாது காப்பாற்றப்பட்ட ஸ்தலம்; ஸ்வாமி அமிர்தகலேஸ்வரர் தேவி அமிர்தவல்லி, நால்வேத தீர்த்தம், சுந்தரர் பாடல்பெற்றது, தேவர்கள் அமிர்தகலசம் பெற்ற களிப்பால் பூசித்த ஸ்தலம்.

கல்வகுண்டா—சென்னை ராஜதானி சித்தூர் ஜில்லா, சித்தூருக்கு 5-மயில் தூரம்; முக்கண்டீஸ்வரர் கோயில், அரர்கொண்டா பொன்னையாறு சங்கமத்தில் கோயில் உளது. இங்கு ஒரு கற்பாறையில் சிவபெருமான் பாதச்சுவடு பொறிக்கப்பட்டிருக்கிறது. கோயில் ஒரு சோழ அரசனால் கட்டப்பட்டது. சோழ அரசர் காலத்து கல்வெட்டுகள் பல உள. கோபுரம் தெற்குப்பார்த்தது. இதற்கு எதிரில் உற்சவ விக்ரஹம் இருக்கிறது. இவ்வூருக்குப் பழய பெயர் கலவைக்குட்டை.

கல்வை — வாலாஜாபாத் தாலுக்கா, செங்கல்பட்டு ஜில்லா, சென்னை ராஜதானி, திருக்காலீஸ்வரர்கோயில் கல்வெட்டுகளில் காரீஸ்வர மஹாதேவர் என்றிருக்கிறது.

கலிங்கபட்டணம் — சென்னை ராஜதானி, விசாகப்பட்டணம் ஜில்லா சிவாலயம்; ஸ்வாமி சங்கமுகேசர், தேவி அம்பிகை, வம்சதான நதி கடலில் சங்கமமாகும் ஸ்தலம்.

கலிக்காமூர்—திரு அன்னப்பன் பேட்டை என வழங்கப்படுகிறது. சென்னை ராஜதானி, தென் திருமுல்லைவாயிலுக்கு 3 மயில் தெற்கு, பராசரர் பூசித்த க்ஷேத்திரம், ஸ்வாமி சுந்தரேஸ்வரர்; தேவி அழகுவன முலையம்மை; திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது. அம்புலி தீர்த்தம்.

கலிஞ்ஜர்—ஐக்கிய மாகாணத்திலுள்ளது. ஜி. ஐ. பி. ரெயில், ஜான்சி மாணிக்பூர் பிரிவிலுள்ள பாதௌசா ஸ்டேஷனிலிருந்து 18 மயில். சிவாலயம், ஸ்வாமி நீலகண்டர்; பெரியலிங்கம். இங்கு தர்மசாலை யுண்டு.

கலுவாயி—சென்னை ராஜதானி. நெல்லூர் ஜில்லா, சென்னகேஸ்வர ஸ்வாமி கோயில்.

கலையூர்—திருக்கலையூர், மலையாள தேசம் தென் இந்தியா, சிவாலயம் அரியக்கோட்டுக்கு அருகிலுள்ளது.

களந்தை—செங்கல்பட்டு ஜில்லா, பாலாற்றங்கரையிலுள்ளது. சிவாலயம், ஆதித்தேச்சரம். ஆதித்த சோழனால் கட்டப்பட்டது.

களித்திட்டை—திருக்களித்திட்டை என அழைக்கப்படுகிறது. சென்னை ராஜதானி, கும்பகோணம் தாலுக்கா, தஞ்சாவூர் ஜில்லா, வேதபுரீஸ்வரர் கோயில்.

**கழுக்காணிமுட்டம்**—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா, மாயவரத்தற்கு ½ மயில். சிவாலயம், ஸ்வாமி கைலாசநாதர், தேவி பார்வதி.

**கலயம்புத்தூர்**—சென்னை ராஜதானி, மதுரை ஜில்லா, பழனிக்கு 2 மயில், சிவாலயம்.

**கழிப்பாலை**—சென்னை ராஜதானி, சிதம்பரத்திற்கு 7 மயில் தென்கிழக்கு, சிவபுரிக்கருகிலுள்ளது. புழய சிவாலயம், கரைமேடு என்னும் இடத்தில் இருந்திருக்கலாமென்று எண்ணப்படுகிறது. ஒரு பெரிய வெள்ளத்தின் பிறகு தற்கால மிருக்குமிடம் கோயில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கலாம். ஸ்வாமி, பால்வண்ண நாதேஸ்வரர், தேவி பொற்பத வேதநாயகி. வான்மீகர் பூசித்த க்ஷேத்திரம். கொள்ளிட தீர்த்தம், மூவர் பாடல்பெற்றது.

**கழுக்குன்றம்**—திருக்கழுக்குன்றம். சென்னை ராஜதானி செங்கல்பட்டு ஜில்லா. செங்கல்பட்டிலிருந்து 9 மயில் தென் கிழக்கு. இதற்கு பட்சிதீர்த்தம், உலகளந்த சோழபுரம், வேதகிரி, தட்சிண கைலாயம், ருத்திரகோடி என்றும் பெயர் உண்டு. கழுகுகள் பூஜித்தமையால் கழுக்குன்றம் எனப் பெயர்பெற்றது. பட்சிதீர்த்தம் எனப்படுவதும் அக் காரணத்தாலேயே. நான்கு வேதங்களும், நான்கு மலை வடிவமாகப் பூசித்தமையால் வேதகிரி எனப் பெயர் பெற்றது. உலகளந்த சோழபுரம் என்பது பழய கல்வெட்டுகளில் உள்ள பெயராகும். அஷ்டவசுக்கள், நந்தி, பசு, வராகம், ருத்திரகோடிகள், சம்பு ஆதி எனும் கழுகுகள், வேதங்கள், விஷ்ணு, பிரம்மா, சுப்ரமணியர், சந்திரன், இந்திரன் முதலியோர் பூஜித்த இடம். மாணிக்கவாசகருக்குத் திருவடி தரிசனம் அளித்த க்ஷேத்திரம். "காட்டினாய் கழுக்குன்றிலே" என்பதைக் காண்க. திருப்புகழில் "கழுகுதொழு வேதகிரி" என்று கூறப்பட்டிருக்கிறது. சுரகுரு எனும் அரசன் மலையின் அடி, நடு, முடிகளில் மூன்று லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து பூசிக்க, கோஹத்தி செய்த பாபம் சிரசினின்றும் காக்கை வடிவமாகப் பறந்து சங்கு தீர்த்தத்தின் தென்மேற்கு மூலையில் மலைவடிவமாக விழுந்ததாக ஸ்தலபுராணம். இதற்கு தற்காலம் காக்கை மலை என்றேபெயர். இச்சுரகுரு அடிவாரக் கோயிலாகிய பக்தவத்சல ஸ்வாமி கோயிலைக் கட்டியதாக ஐதீகம்.

ஸ்வாமி, வேதகிரீஸ்வரர், (மலைமீது) பக்தவச்சலேஸ்வரர் (அடிவாரம்), தேவி பெண்ணினல்லாளம்மை, திரிபுரசுந் தரி, மலைச் சொக்கநாயகி, ஸ்தலவிருட்சம் வாழை. தீர்த் தங்கள், சங்குதீர்த்தம், வசுதீர்த்தம், இந்திர தீர்த்தம், பட்சி தீர்த்தம், நந்தி தீர்த்தம் (கோயிலுக்குள் இருப்பது.) சங்கு தீர்த்தத்தில் வலம்புரிச்சங்கம் பல வருடங்களுக் கொரு முறை பிறப்பதாக ஐதிகம். இங்கு மேற்குறித்தபடி இரண்டு கோயில்கள் உள, அடிவாரக் கோயில் மலைக்கோ யில்; ஸ்வாமிக்கு வேதகிரீஸ்வரர் என்று பெயர். இது அதர்வண மலையின் உச்சியிலிருக்கிறது. கோயில் கிழக் கேபார்த்தது ஒரே பிராகாரமுடையது, இங்கு நந்தி யில்லை; மூலஸ்தானம் 3 பெரும் கற்பாறைகளாலாயது. உட் புரத்தில் பல தேவதைகளின் உருவங்கள் செதுக்கப்பட் டிருக்கின்றன. மேற்குபக்கம் மும்மூர்த்திகளின் உருவங் கள், வடக்குப்பக்கம் யோக தட்சிணமூர்த்தி, தெற்குபக்கம் நந்திகேஸ்வரர், சண்டேஸ்வரர். சுயம்புலிங்கம், வாழைப் பூவின் ஆகாரமுடையது. கவசத்தினால் மூடப்பட்டிருக்கி றது; சாதாரணமாக இக்கோயிலில் 12 வருடங்களுக்கொரு முறை இந்திரன் இடி அபிஷேகம் செய்வதாக ஐதிகம். உச்சிவேளையில் தினம் இங்கு இரண்டு கழுகுகள்வந்து, கழுகு, பண்டாரத்தின் கரத்தினின்றும் உணவருந்திப் போகின்றன. 1681 ஆம் ஆண்டில் இவ்வதிசயத்தைப் பார்த்ததாக, ஒரு டச்சுக்காரர் எழுதியிருக்கிறார். கல் வெட்டுகளில் மூலஸ்தானக் கோயில் என்று சொல்லப்பட் டிருப்பது வேதகிரீஸ்வரர் கோயில்தான் என்று எண்ணப் படுகிறது. கோயிலின் உச்சியிலிருந்து கீழே இறங்கிவரும் போது 50 படிகளின் கீழ் "ஒரு கல்மண்டபம்" என்று ஒன்று உளது. தற்காலம் இது சிவாலயமாயிருக்கிறது. பூர்வகாலத்தில் இது ஜெயினக் கோயிலா யிருந்திருக்க லாம் என்று சிலர் எண்ணுகின்றனர். தற்காலம் சிவலிங் கம் இருக்கிறது; மலைச்சாரலில் செதுக்கப்பட்ட மஹாபலி புரம் குகைக் கோயில்களைப் போன்றது. இங்குள்ள உரு வங்கள் மஹாபலிபுரம் தர்மராஜா ரதத்திலுள்ள உருவங் களைப்போலிருக்கின்றன; ஆகவே இது பல்லவ அரச னை நரசிம்மவர்மன் காலத்தில் வெட்டப்பட்டிருக்கலாம். இங்குள்ள லிங்கத்திற்கு மூலஸ்தான ஈஸ்வரர் என்று பெயர் இருந்திருக்கலாம் என்று எண்ண இடமுண்டு. லிங்கம்

திரண்ட வடிவமுள்ளது. தமிழ் நாட்டில் இம் மூலஸ்தான ஈஸ்வரர் கோயில்தான் பழய கல்வெட்டுகளின்படி, மிகவும் புராதனமான கற்கோயில். 7 ஏழாம் நூற்றூண்டில் ஸ்கந்தவிஷ்ணு எனும் பல்லவ அரசன் இதற்கு மானியம் விட்டிருக்கிறன். இம்மலையானது சுமார் 500 அடி உயரமிருக்கும். அடிவாரத்திலுள்ள பக்தவற்சலேஸ்வரர் கோயிலுக்கு நான்குபுறமும் அழகிய கோபுரங்கள் உள. வடக்கு கோபுரம் 9 நிலையுடையது, மிகவும் உயரமானது கோயில் இரண்டு பிராகாரங்களுடையது, 500 × 300 அடி விஸ்தீரணம் ; ஸ்வாமி கர்ப்பக்கிரஹம் கஜப்பிரஷ்ட ஆகிருதி உடையது. அம்மன் சந்நிதி அழகாய்த் தற்காலம் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மோற்சவம் சித்திரை மாசம்; மூன்றூநாள் அதிகாரநந்தி வாகனம் கிரிப் பிரதட்சணம் விசேஷம். இங்கு வசந்தோற்சவம் மிகவும் விமரிசையாக நடக்கிறது. பக்தவத்சலேஸ்வரர் கோயில் அறை ஒன்றில் ஸ்கந்தசிஷ்யர் எனும் அரசன் மூலஸ்தான ஸ்வாமிக்கு மான்யம் விட்டதாகவும், அதை வாதாபிகொண்ட நரசிம்ம பொத்தராயரும், முதல் ராஜகேசரிவர்ம ஆதித்யரும் ஊர்ஜிதப்படுத்தியதாகவும் கல்வெட்டுகள் கூறுகின்றன. இங்குள்ள மலையின் படிகளும், வேதகிரீஸ்வரர் கோயில் தென் சுவரிலுள்ள விநயகர் உருவமும், பூவிஞர் சூர்யதேவர் என்பவரால் செதுக்கப்பட்டவை. திரிபுரசுந்தரி கோயில் 1259 ஆம் ஆண்டிற்கு முன்னதாகவே இருந்திருக்கவேண்டும்; அவ்வருஷத்தில் ஆண்ட சுந்தரபாண்டியன் கல்வெட்டொன்று இங்கு இருக்கிறது. இங்குள்ள பழய கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது முதலாம் பராந்தகனுக்கு முன்பு ஆண்ட ராஜகேசரிவர்மனுடைய காலத்தியதாம். சுரகுரு எனும் அரசன் இங்குள்ள கோயிலை மராமத்து செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மலையின்பேரில் ஒருபுரம் திருமலை சொக்கம்மாள் கோயிலிருக்கிறது. இதற்கு அடிவாரத்தில் பிரபலமான பிரதி தொனியுண்டு. அடிவாரக் கோயிலிலுள்ள அகோர மூர்த்தி பார்க்கத்தக்கது. இவ்விடம் கிரிப் பிரதட்சிணம் விசேஷம் ; இதனல் சகல பிணியும் நீங்குமென்பது ஐதிகம்; இது இரண்டுமயில் இரண்டுபர்லாங் சுற்றளவாகும். சமயகுரவாசாரியர்கள் கோயில் கிரிப்பிரதட்சிணத்தில் தெற்குபாகத்திலிருக்கிறது. மலையின் வாயு மூலையில்

சஞ்சீவி யிருப்பதாக ஐதிகம்; இங்கு மலைமருந்து கிடைக்கிறது. அடிவாரக்கோயிலில் ஆமை மண்டபம் அழகியது. இங்கு மற்றொரு சிவாலய முண்டு; ருத்திரன்கோயில் எனப் பெயர்கொண்டது. இது சங்குதீர்த்தத்திற்கு தென்கிழக்கிலிருக்கிறது. மிகவும் பழய கோயில்; ஸ்வாமிக்கு ருத்திர கோடீஸ்வரர் என்று பெயர்; தேவி அபிராம அம்மன்; ருத்திர கோடிதீர்த்தம். கோயில் ஒரே பிராகாரமுடையது; தற்காலம் ஒருகாலபூஜைதான் நடக்கிறது. இக்கோயில் மலையடிவாரக் கோயிலுக்கு முற்பட்டது, இங்குள்ள கோபுரம் 4 நிலைகளுடையது; இங்குள்ள சண்டேஸ்வரருக்கு மண்டபமில்லை. அம்மன் சந்நிதி பிறகு கட்டியதுபோல் காண்கிறது. ஸ்வாமிகோயிலும் அம்மன் கோயிலும் அக்கம்பக்மாயுள்ளன, இரண்டும் கிழக்குபார்த்தவை. இங்குள்ள விநாயகருக்கு வண்டுவன விநாயகர் என்று பெயர். திருக்கழுக்குன்றம் கிரிப்பிரதட்சிண பாதையில் விஸ்வாமித்ர தீர்த்தம், கோடி விநாயகதீர்த்தம், மெஞ்ஞான தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்கள் உள. சங்கு தீர்த்தம் 560 × 760 அடி. நடுவிலுள்ள மையமண்டபம் அழகியது. சங்குதீர்த்தக் கரையில் **மார்க்கண்டேஸ்வரர்** கோயில் என்று ஒரு சிவாலய முண்டு. இது மார்க்கண்டேயர் சிவபெருமானுக்கு சங்காபிஷேகம் செய்த இடத்தைக் குறிப்பதாம். பக்தவத்சலேஸ்வரர் கோயில் குறைந்தபட்சம் 700 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டிருக்கவேண்டும். இவ்வூரிலுள்ள மூன்று கோயில்களில் வேதகிரீஸ்வரர் கோயில் (மலை உச்சிகோயில்) தான் மிகவிம் புராதனமானது. பக்தவச்லேஸ்வரர் கோயில் இரண்டாம் பிராகாரத்தில் திரு ஆபரணக்கொட்டடி ஒன்றுளது. இது கி. பி. ஒன்பதாம் ஆண்டில் ஒரு சிறு கோயிலாயிருந்திருக்க வேண்டும். இங்கு கணேசர், தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரம்மா முதலிய தேவதைகளின் சிலைகளிருக்கின்றன. இதில் 671 ஆண்டின் கல்வெட்டொன்று உளது. ராஜகேசரிவர்மன் காலத்திய கல்வெட்டொன்றும் உளது. இது ஸ்கந்தவிஷ்ணு எனும் பல்லவ அரசன் காலத்தில் ஒரு கோயிலாக இருந்ததாகத் தெரிகிறது. அவன் காலம் சுமார் 5 ஆம் நூற்றாண்டாம். அவன் காலத்தில் செங்கற் கோயிலாயிருந்து பிறகு கருங்கற்கோயிலாக மாற்றப்பட்டிருக்கலாம். இக் கட்டடம் கஜப்பிருஷ்ட ஆகிருதி உடை

யது என்பது கவனிக்கத்தக்கது. தற்காலத்திய பக்தவற்ச லேஸ்வரர் கோயில் பாண்டிய அரசனுகிய ஜடாவர்மர் சுந் தரபாண்டியனுல் கட்டப்பட்டது. காலம் சுமார் 1251. இங்கு மூன்ளும் பிராகாரம் சுமார் 700 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டதாகும். ருத்திரகோடீஸ்வரர் கோயில் கோடிராட்சதர்களைக் கொன்ற கோடி ருத்திரர்கள் பூசித்த ஸ்தலமென்பது புராணம்.

**கழுக்காணிமட்டம்**—சென்னை ராஜதானி தஞ்சாவூர் ஜில்லா சிவாலயம். இதற்கு சக்திபுரம் என்றும் பெயர்; சப்த மாதர்களுள் வராஹி பூசித்தது.

**கள்ளப்பெரம்பூர்** — சென்னை ராஜதானி திருச்சிராப் பள்ளி ஜில்லா, ஸ்வாமி கைலாயநாதர். தேவி பெருந்திரு வம்மன்.

**கள்ளம்பட்டி**—திருமெய்யம் தாலுக்கா புதுக்கோட்டை சமஸ்தானம் சென்னை ராஜதானி, சிவாலயம்.

**கள்ளம்பல்லா**—சத்யமங்கலம் தாலுக்கா, கோயமுத்தூர் ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம்.

**கள்ளாறு** — திருக்கள்ளாறு மன்னுர்குடி தாலுக்கா, தஞ்சாவூர் ஜில்லா, சென்னை ராஜதானி சிவாலயம்; ஸ்வாமி பாரிஜாதவனேஸ்வரர்.

**கள்ளிக்கோட்டை**—மலபார் ஜில்லா, சோரனூருக்கு 30 மயில்; சென்னை ராஜதானி. சிவாலயம்; இதை தனி சிவன் கோயில் என்று இங்குள்ளவர் அழைக்கின்றனர். ரெயில் ஸ்டேஷன்.

**கள்ளில்**—திருக்கள்ளில், திருக்கள்ளம், எனவும் வழங்கப்படு கிறது. சென்னை ராஜதானி பொன்னேரி ஸ்டேஷனுக்கு 12-மயில் தென்மேற்கு. பிருகுமுனி பூசித்த க்ஷேத்திரம்; சிவபெருமான் இவருக்கு தட்சிணமூர்த்தி ரூபமாக தரிசி னம் கொடுத்த ஸ்தலம். ஸ்வாமி சிவாநந்தேஸ்வரர். தேவி ஆனந்தவல்லி; நந்தி தீர்த்தம். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

**களக்குடி**—சென்னை ராஜதானி, மதுரை ஜில்லா, சிவா லயம்; ஸ்வாமி குவனேசர்; தேவி சண்பகவல்லி; குடைந்த மலையில் லிங்கமுள்ளது. வைப்புஸ்தலம்.

[illegible]—பனிஹொன்ஹள்ளி தாலுக்கா, மைசூர் ராஜ்யம். [illegible] ஸ்டேஷனுக்கு 7-மைல். கோயில் தெற்கு பார்த்தது, பெரியது. ஸ்வாமி காமேஸ்வரர். ஆதிகாலத்தில் இது ஜைன ஆலயமாயிருந்து பிறகு சிவாலயமாக மாற்றப்பட்டதென்பர். கோயில் ஸ்ருதபிந்து என்பவரால் கட்டப்பட்டதென்பர். ஸ்வாமி சர்வாங்க சுந்தரேஸ்வரர்; தேவி பார்வதி; அப்பு தீர்த்தம்.

களம்பூர் — திருமெய்யம் தாலுக்கா புதுக்கோட்டை [illegible]ம் சென்னை ராஜதானி, சிவாலயம், ஸ்வாமி வைதீஸ்வரர், கதலீஸ்வரர். பாண்டிய அரசன் தெரியாமல் வாளால் லிங்கத்தை பின்னப்படுத்தியதாக ஐதிகம். லிங்கத்தின் தென்பாகம் செப்புக் கட்டமைந்திருக்கிறது. இங்கு அரு[illegible] மற்றொரு சிவாலய முண்டு.

[illegible]ளர் — (திரு) சென்னை ராஜதானி, மன்னார்குடி தாலுக்கா, திருத்துறைபூண்டி ஸ்டேஷனுக்கு 9-மயில் தென்மேற்கு; சுவாமி களர்முளைநாதேஸ்வரர்; தேவி அழகேஸ்வரி இளங்கொம்பன்னள். துர்வாச தீர்த்தம். பராசரும் கண்வரும் பூசித்த க்ஷேத்திரம். துர்வாசருக்கு பரமசிவம் நடன தரிசனம் கொடுத்த ஸ்தலம்; காளமுனி பூசித்த ஸ்தலம். கோயிலில் துர்வாசருடைய சிலை இருக்கிறது. பிரம்மோற்சவம் சித்திரைமாதம். திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது.

க ளி த் தி ட் டை [illegible]—சென்னை ராஜதானி, தஞ்சாவூர் ஜில்லா, கும்பகோணம் தாலுக்கா ஸ்ரீ வேதபுரீஸ்வரர் கோயில்.

கற்குடி—கற்குடி மாமலை என்றும் பெயர். சென்னை ராஜதானி திருச்சிராப்பள்ளிக்கு 6-மயில் வடமேற்கு; உய்யக்கொண்டான் பெருமலை எனவும் வழங்கப்படுகிறது. சிவாலயம் ஒரு கற்பாறைமீதிருக்கிறது. இதைச் சுற்றிலும் 6-அடி அகலமுள்ள மதில் உளது. மார்க்கண்டர், கரன், பூசித்த ஸ்தலம். கரன் சிலை கோயிலிலுள்ளது. இதற்குக் கைகளில்லை. கோயிலிலுள்ள தட்சிணாமூர்த்தி பார்க்கத் தக்கது. ஸ்வாமி முக்தீஸ்வரர், உச்சிநாதேஸ்வரர், உய்யக்கொண்டார். வில்வமரம். தேவி அஞ்சனாட்சியம்மை; முக்தி தீர்த்தம்; சோழராட்டரசன் பூசித்து முக்திபெற்ற ஸ்தலம்.

உஜ்ஜீவநாதர் கோயில். மூவர் பாடல் பெற்றது. தர்மபுர மேற்பார்வை.

**கற்றளி**—திருக்கற்றளி, சென்னை ராஜதானி புதுக் கோட்டை சமஸ்தானம், புதுக்கோட்டைக்கு 4-மயில். சிவாலயம் பல்லவ கட்டிடம்; முழுவதும் கருங்கல்லாலாயது 8-ஆம் ஆண்டிற்கு முந்தியது.

**கறையூர்** — சென்னை ராஜதானி, ஆற்காடு ஜில்லா, திருவண்ணாமலைக்கு 16-மயில் சிவாலயம். ஸ்வாமி கறை கண்டேசர், தேவி பிருகந்நாயகி; இதற்குக் காஞ்சிக் கறை யாடி என்றும் பெயர். வைப்புஸ்தலம்.

**கனக்காடு** — சென்னை ராஜதானி, திருநெல்வேலிக்கு 22-மயில் சிவாலயம். ஸ்வாமி சகலபுவனேஸ்வரர். உமா தேவி; நளாயினி ஆணிமாண்டாவிய ரிஷி பூசித்தது.

**கனக்கலா**—வட இந்தியா, சிவாலயம் சுயம்புலிங்கம்; ஸ்வாமி ருத்திரேஸ்வர்.

**கன்டபல்லி**—சென்னை ராஜதானி கோதாவரி ஜில்லா, சிவாலயம்; ஆதியில் புத்த ஆலயமாயிருந்து மாற்றப்பட்ட தென்பர்.

**கன்யாகுமரி** — திருவாங்கூர் ராஜ்யம். இந்தியாவின் கடைசிமுனை. குகநாதேஸ்வரர் சிவாலயம். இக்கோயில் ராஜராஜ சோழனல் கட்டப்பட்டது. சுமார் 984-ஆம் ஆண்டில் அவ்வரசன் அதுவரையில் திக்விஜயம் செய்த தற்கு அறிகுறியாக கட்டினன். ராஜேந்திர சோழன் கால முதல் விக்கிரம சோழன் காலம்வரை பல கல்வெட்டுகள் உள. பாண்டியர்கள் காலத்தில் இது சோழாதேஸ்வரம் எனப் பெயர்பெற்றது; இது கோநாதேஸ்வரம் என்று மருவி, பிறகு குஹநாதேஸ்வரம் என்ருயது என எண்ணப் படுகிறது. கோயில் தற்காலம் மிகவும் கிலமாயிருக்கிறது. தஞ்சாவூர் பிரஹதீஸ்வரர் கோயிலைப்போன்ற கட்டடம்.

**கஜாரண்யம்**—தென் இந்தியா, சிவாலயம், ஸ்வாமி கஜாரண்யேஸ்வரர், பார்வதி தேவி, காவிரி தீர்த்தம்.

---

[தொடரும்]